

# श्री देवी भुजंगम्

ஸ்ரீ பகவத்பாதர்கள்

அருளிய

# ஸ்ரீ தேவீ புஜங்கம்





ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள்

ஸ்ரீ காமகோடி க்ரந்தாவளி—49.

ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள்

அருளிய

# श्री देवीभुजङ्गम्

# ஸ்ரீ தேவீ புஜங்கம்

ஸ்ரீ ஜகத்குரு காஞ்சீ காமகோடி பீடாதிபதி
ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளின்
ஸ்ரீமுகத்துடனும்

தர்மஜ்ஞ எம். ராமநாத தீக்ஷிதர் எழுதிய
தமிழ் அனுவாதத்துடனும்

ஸ்ரீ ஸ்வாமி சாஸ்திரிகளின் முன்னுரையுடனும் கூடியது



ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-600001



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்
ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள்

॥ श्रीः ॥




श्रीमत्परमहंसपरिव्राजकाचार्यवर्य श्रीमच्छङ्करभगवत्पादप्रतिष्ठित-
श्रीकाञ्ची कामकोटिपीठाधिप जगद्गुरु श्रीपादैः क्रियते
नारायणस्मृतिः ॥

श्रीमूकपञ्चशती-मुकुन्दमाला-शिवपादादिकेशान्तवर्णनादीन् गरिष्ठान् ग्रन्थविशेषान् द्राविडचनुवादैः साकं प्रकाशयित्वा आस्तिकानां भक्तिभावमभिवर्धयद्भिः अस्मत्प्रियान्तेवासिभिः श्रीकामकोटिकोशस्थाननिर्वाहकैः अद्य श्रीभगवत्पादादिमहनीयैः सर्वजनोद्धारणार्थमनुगृहीताः भगवन्मूर्तिप्रभेदगुणवर्णनपटीयांसः भक्तिरस-सर्वस्वभूताः श्रीहनूमत्पञ्चरत्न-सुब्रह्मण्यभुजङ्गादिस्तोत्रतल्लजाः द्राविडचनुवादैः साकं प्रकाशयिष्यन्त इति विदित्वा परमां मुदं भजामः ।

आस्तिकाः एतानि स्तुतिरत्नानि सार्थानुसन्धानं पठन्तः शृण्वन्तश्च भगवद्भक्तिपरवशीकृतस्वान्ताः श्रीचन्द्रमौलीश्वर-कृपापात्रीभूताः सकलभाग्यजातं प्राप्नुवन्त्वित्याशास्महे ।

यात्रास्थानम्
इलैयात्तकुटी
शुभकृच्छ्रावणशुद्धप्रथमा

नारायणस्मृतिः ।

ஸ்ரீ:

முத்திரை

ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யவர்ய
ஸ்ரீமத் சங்கரபகவத்பாத ப்ரதிஷ்டித
ஸ்ரீகாஞ்சீ காமகோடி பீடாதிப ஜகத்குரு
ஸ்ரீபாதை: க்ரியதே நாராயண ஸ்ம்ருதி: ||

ஸ்ரீ மூகபஞ்சசதீ - முகுந்தமாலா - சிவபாதாதி கேசாந்தவர்ணனம் முதலிய அரும்பெரும் நூல்களைத் தமிழுரையுடன் வெளியிட்டு ஆஸ்திகர்களின் பக்தி உணர்ச்சியை வளர்க்கும் நம் பிரிய சிஷ்யரான ஸ்ரீ காமகோடி கோசஸ்தான நிர்வாஹகர்கள், இப்பொழுது ஸ்ரீ பகவத்பாதர்கள் முதலிய பெரியோர்கள் அருளிய பக்திமயமான ஸ்தோத்திரங்களைத் தமிழுரையுடன் வெளியிடுவதை அறிந்து மிகவும் சந்தோஷிக்கிறோம்.

ஆஸ்திகர்கள் இந்த ஸ்தோத்திர ரத்தினங்களைப் பொருளறிந்து படித்தும் கேட்டும், பகவத் பக்தியில் திளைத்த உள்ளத்தினராய், ஸ்ரீ சந்த்ரமௌளீச்வரரின் கிருபைக்குப் பாத்திரராகி, ஸகல பாக்கியங்களையும் பெறுவார்களாக.

யாத்ராஸ்தானம்
இளையாத்தகுடி
சுபக்ருத் ச்ராவண சுத்தப்ரதமா } நாராயண ஸ்ம்ருதி.

# முன்னுரை

தித்திப்பு ரஸத்தால் செய்த பக்ஷணங்கள் பெயரி ஞலும் உருவத்திஞலும் வேறுபட்டதுபோல் தோன் றிஞலும் எல்லாம் தித்திப்பு மயம்தான். அதுபோல, ஸ்ரீ பகவத்பாதர்கள் செய்த கிரந்தங்கள் வெவ்வேருக நமக்குத் தோன்றிஞலும் எல்லாக் கிரந்தங்களிலும் அத்வைத ரஸம்தான் இருக்கும். சாஸ்த்ர விசாரம் வேறு; அநுபவம் வேறு. பாஷ்யத்ரயத்தில் சாஸ்த்ர விசாரம் செய்யலாம். அநுபவத்திற்கு உபாஸ்திதான் அவசியம். இந்த அநுபவத்தை நாம் பெறுவதற்காக ஸௌந்தர்யலஹரி, தேவீ புஜங்கம் முதலான ஸ்தோத் திரங்களை ஸ்ரீ பகவத்பாதர்கள் நமக்கு அருளிஞர்கள். மாயூரம் ஸ்ரீ ராமநாத தீக்ஷிதர் அவர்களும் தேவீ புஜங்கம் என்னும் இந்த ஸ்தோத்திரத்துக்குத் தமிழ் விளக்கம் கொடுத்து மிகவும் உன்னதமாக எழுதி யிருக்கிருர்கள். இதை நாம் எல்லோரும் படித்து அம்பாளின் அருளுக்குப் பாத்திரர்கள் ஆவோமாக.

ஸ்ரீகுருபாததூளி
ஸ்வாமி சாஸ்திரி

உ

ஸ்ரீ சிவாப்யாம் நம:

# முகவுரை

अन्तरपि बहिरपि त्वं जन्तुततेरन्तकान्तकृदहन्ते ।
चिन्तितसन्तानवतां संततमपि तन्तनीषि महिमानम् ॥

அந்தரபி பஹிரபி த்வம் ஜந்து ததேரந்தகாந்தக்ருதஹந்தே ।
சிந்தித ஸந்தாநவதாம் ஸந்ததமபி தந்தநீஷி மஹிமாநம் ॥

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரியரவர்கள் இந்தப் பாரத பூமியில் சுமார் 2000 வருஷங்களுக்குமுன் அவதரித்துக் குமரி முதல் இமயம் வரை கால் நடையாகப் பாரதம் முழுவதும் ஸஞ்சாரம் செய்து எழுபத்திரண்டு துர்மதங்களை ஜயித்து அத்வைத மதத்தை நிலைநாட்டினார்கள் என்பது பிரசித்தமானது. ஸகுண மூர்த்தியை உபாஸிப்பதற்காக ஆறு மதங்களை ஸ்தாபித்து ஆறு விதமான தேவதைகளை வழிபடும்படி செய்தார்கள். அதனால் அவர்களை षण्मतस्थापकाचार्याः என்று புகழுகின்றனர். ஆறு மதங்களாவது: சைவம், வைஷ்ணவம், சாக்தம், ஸ்காந்தம், காணபதம், ஸௌரம் என்று கூறப்படும். இங்கே சாக்தம் என்ற மதத்தில் உபாஸிக்கப்பெறும் தெய்வம் பராசக்தி. பராசக்தியானவள் ஞானசக்தி ப்ரதானமான அவதாரங்களால் தத்வோபதேசத்தையும், க்ரியாசக்தி ப்ரதானமான அவதாரங்களால் துஷ்ட ஸம்ஹாரத்தையும் செய்து உலகத்தைக் காப்பாற்றுகிறாள். இவ்விதம் கூறுவதற்குக் கேநோபநிஷத்தில் உமா என்ற பெயருடன் ஆவிர்ப்பவித்துத் தேவர்களுக்கும், தேவீ பாகவதத்

தில் சும்பநிசும்பாஸுரர்களால் துன்புறுத்தப்பட்ட தேவர்கள் இமயமலையையடைந்து துதிக்கும்பொழுது சைத்ர சுத்த நவமியன்று ஆவிர்ப்பவித்து ஹிமவான் முதலியவர்களுக்கும் தத்வோபதேசம் செய்தாள் என்பதும் மஹிஷாஸுர மர்த்தினியாகவும் துர்க்கையாகவும் ஆவிர்ப்பவித்து மஹிஷாஸுரன் துர்கமன் என்ற அஸுரர்களை ஸம்ஹாரம் செய்தாள் என்பதும் முறையே சான்றாகும்.

நமது பாரத நாட்டுக்கே அதிஷ்டான தேவதையாக விளங்குபவள் பராசக்திதான். பாரதத்தின் தெற்கு எல்லையாகிய குமரியில் கன்னியா ரூபியாக விளங்குகிறாள். வடக்கு எல்லையாகிய இமயமலையில் நித்ய ஸாந்நித்யம் பெற்று விளங்குகிறாள் என்பது வேதத்திலும் புராணங்களிலும் பிரசித்தமானது. இந்த அநுபவத்தையொட்டியே தத்காலத்திலும் கொடியேற்று விழாவிலும் அரசாங்க அலுவலகங்களிலும் வணங்கும் தெய்வத்தைப் பாரதமாதா என்று அழைக்கிறோம். ஆகையினால் பாரத தேசத்தில் உதித்த ஒவ்வொருவரும் தம்மைக் காக்கும் தாயாக வணங்க வேண்டிய தெய்வம் பராசக்திதான் என்று ஏற்படுகிறது.

வேதத்திலும் வேதோக்தமான கர்மாக்களிலும் அதிகாரமுள்ளவர்கள் பராசக்தியை ஸூர்ய மண்டலத்தில் விளங்கும் காயத்திரியாக உபாஸிக்கிறார்கள். அவர்கள் காயத்திரியை உபாஸிக்காமல் மற்ற எந்தக் காரியத்தைச் செய்தாலும் பயனில்லை என்பது சாஸ்திரங்களின் தீர்மானம். அதனால் சைவம், வைஷ்ணவம் முதலிய மதங்களைச் சேர்ந்த எல்லோருமே பேத

யின்றி உபாஸிக்கும் தெய்வம் பராசக்தி என்பது நன்கு விளங்குகிறது.

கிராமத்தில் வாழ்பவர்களுக்குக் கிராமதேவதையாகக் காத்யாயினி (காத்தாயி), வாக்தேவதை (பேச்சாயி) என்று விளங்குகிறாள். பல கிராமங்களுக்குப் பிரதானமாக விளங்கும் நகரங்களுக்கும் அதிஷ்டான தேவதையாக விளங்குபவள் பராசக்தியே. கல்கத்தா, பம்பாய் முதலிய நகரங்களில் காளி, மும்பாதேவி என்ற பெயருடன் விளங்குகிறாள். பல நகரங்கள் சேர்ந்த தேசத்துக்கும் (நமது தேசமாகிய இந்தியாவுக்கும்) பராசக்தியே அதிஷ்டான தேவதை என்பதை முன்பு காரணங்களுடன் கூறினோம்.

நமது தமிழ்நாட்டுக்குத் தலைநகரமாக விளங்கிய காஞ்சீபுரத்திலும் காமாக்ஷீ என்ற பெயருடன் நமது நாட்டைக் காக்கும் தெய்வமாக விளங்குகிறாள். அவ்விதம் விளங்கும் ஸ்ரீ பங்காரு காமாக்ஷியின் கும்பாபிஷேக மஹோத்ஸவத்தில் அவள் திருவடித்தாமரையில் ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதிகளான ஜகத்குரு பரமாசாரியர்கள் அவர்களின் கருணை ததும்பும் கடாக்ஷங்களாகிய வண்டுகள் தேனைப் பருகும் பொழுது ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் அருளிச்செய்த 27 நக்ஷத்திரங்கள் போல் பிரகாசிக்கின்ற 27 சுலோகரூபமான தேவீ புஜங்கம் என்ற கிரந்த மலரைத் தமிழில் மொழிபெயர்த்து மகிழ்ச்சியுடன் ஸமர்ப்பிக்கின்றோம்.

எம். ராமநாத தீக்ஷிதர்.

|| श्रीः ||

|| श्री शिवाभ्यां नमः ||

# || श्री देवीभुजङ्गम् ||

# ஸ்ரீ தேவீ புஜங்கம்

विरिञ्च्यादिभिः पञ्चभिर्लोकपालैस्समूढे महानन्दपीठे निषण्णम् ।
धनुर्बाणपाशाङ्कुशप्रोतहस्तं महस्त्रैपुरं शङ्कराद्वैतमव्यात् ॥ १ ॥

விரிஞ்ச்யாதிபி: பஞ்சபிர் லோகபாலை:
ஸமூடே மஹாநந்தபீடே நிஷண்ணம் ।
தநுர்பாண - பாசாங்குச - ப்ரோதஹஸ்தம்
மஹஸ் த்ரைபுரம் சங்கராத்வைதமவ்யாத் ॥

பதவுரை:-विरिञ्च्यादिभिः-பிரம்மதேவன் முதலியவர்களான, पञ्चभिः - ஐந்து, लोकपालैः - உலகத்தைக் காப்பவர்களால், समूढे - தரிக்கப்பட்ட, महानन्दपीठे - பேரானந்தத்தைக் கொடுக்கும் ஸிம்மாஸனத்தில், निषण्णम् - வீற்றிருப்பதும், धनुर्बाणपाशाङ्कुशप्रोतहस्तम् - வில் அம்பு பாசம் அங்குசம் இவற்றைத் தரிக்கும் கைகளையுடையதும், शंकराद्वैतम् - பரமசிவனோடு ஒன்றாயுள்ளதும், त्रैपुरम् - த்ரிபுரஸுந்தரீ ரூபமாயுள்ளதுமான, महः - தேஜஸ், अव्यात् - காப்பாற்றட்டும்.

கருத்து:—ஒரு கிரந்தம் எழுத ஆரம்பிக்கும் பொழுது தனது இஷ்டதேவதையை நமஸ்கரிப்ப

தையோ, சிஷ்யர்களுக்கு ஆசீர்வாதம் செய்வதையோ, கிரந்தத்தில் கூறப்பெறும் வஸ்துவை நிர்தேசம் செய்வதையோ எழுதுவது பழக்கம். இங்கு अव्यात् என்று ஆசீர்வாதத்தையும், त्रैपुरं महः என்று வஸ்து நிர்தேசத்தையும் செய்கிறார்கள்.

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யர்கள் அத்வைத ஆனந்தத்தில் மூழ்கியவர்களாக இருப்பதனால் அவர்களின் மனத்தில் ஸகுண மூர்த்தியைச் சொல்ல ஆரம்பித்தபொழுதும் அது நிர்குணமாகவே தோன்றுகிறது. அதனால் அம்பாளை த்ரைபுரம் மஹ: என்று தியானம் செய்கிறார்கள். இவ்விதம் ப்ரஹ்ம ஸ்வரூபமாகத் தியானம் செய்வது இடையூறுகளை விலக்கி மங்களத்தைக் கொடுக்கிறது.

अशुभानि निराचष्टे तनोति शुभसन्ततिम् ।
स्मृतमात्रेण यत् पुंसां ब्रह्म तन्मङ्गलं परम् ॥

அஶுபாநி நிராசஷ்டே தநோதி ஶுபஸந்ததிம் ।
ஸ்ம்ருதமாத்ரேண யத் பும்ஸாம் ப்ரஹ்ம தந்மங்கலம் பரம் ॥

இந்த ச்லோகத்தில் அம்பாள் தன் ஆயுதங்களுடன் ஸிம்மாஸனத்தில் வீற்றிருப்பதாக வர்ணிக்கிறார்கள். சிங்காஸனத்தின் நான்கு பாதங்களையும் உலகத்தின் ஸ்ருஷ்டி பாலனம் ஸம்ஹாரம் திரோதானம் என்ற நான்கு காரியங்களைச் செய்கிற பிரம்மா விஷ்ணு ருத்திரன் ஈச்வரன் என்ற நான்கு தேவர்களாகவும், அமரும் இடத்தை அநுக்ரஹ மூர்த்தியான ஸதாசிவஸ்வரூபமாகவும் கூறியிருக்கிறார்.

"पर्यङ्कस्य भजामः पादान् बिम्बाम्बुदेन्दुहेमरुचः ।
अजहरिरुद्रेशमयान् अनलासुरमारुतेशकोणस्थान् ॥"—आ.दि.

இவ்விதம் வர்ணிப்பது ப்ரஹ்மாதி தேவர்களை யும் அநுஸந்திப்பதாக ஆகிறது. அம்பாளின் கையிலுள்ள பாசம், அங்குசம், வில், அம்பு இவற்றை ஸ்மரிப்பதால் ஜனங்களை வசீகாரம் செய்யலாம் என்றும் சக்ரவர்த்தியாக ஆகலாம் என்றும் கூறியிருக்கிறது.

"पाशं सृणिं च करयोस्तव भावयन्तः
संस्तंभयन्ति वशयन्ति च सर्वलोकम् ।
चापं शरं च सकृदम्ब तव स्मरन्तः
भूपालतां व्रजति भोगपथावतीर्णाः ॥" —आ. सा.

பாஶம் ஸ்ருணிஞ்ச கரயோஸ்தவ பாவயந்த:
ஸம்ஸ்தம்பயந்தி வஶயந்தி ச ஸர்வலோகம் ।
சாபம் ஶரஞ்ச ஸக்ருதம்ப தவ ஸ்மரந்த:
பூபாலதாம் வ்ரஜதி போக பதாவதீர்ண: ॥

இங்கு शंकराद्वैतं महः - என்று பரமசிவனுடன் கூடிய பரதேவதையை அநுஸந்திக்கிறார்கள். இதுதான் ப்ரபஞ்சகாரணம் என்று கூறப்படு கிறது. தேவீபாகவதம் ஒன்பதாவது ஸ்கந்தத் தில், உலகம் உண்டாவதற்கு முன்பு பரப்ரஹ்மத் தின் உருவம் ஒளிவடிவமாகவும், பிறகு ஸ்ருஷ்டி காலத்தில் அதுவே இரு விதமாகத் தோற்ற மளிப்பதாகவும் கூறியிருக்கிறது.

"स चात्मा स परं ब्रह्म द्विधा भूतो बभूव ह ।
स्त्रीरूपो वामभागांशः दक्षिणांशः पुमान् स्मृतः ॥"

ஸ சாத்மா ஸ பரம் ப்ரஹ்ம த்விதாபூதோ பபூவ ஹ ।
ஸ்த்ரீரூபோ வாமபாகாம்ஶ: தக்ஷிணாம்ஶ: புமாந் ஸ்ம்ருத: ॥

இந்த ஸ்வரூபத்தைக் காளிதாஸர் கூறுகிறார் உலகுக்குத் தாய்தந்தைகளாக.

वागर्थाविव संपृक्तौ वागर्थप्रतिपत्तये ।
जगतः पितरौ वन्दे पार्वतीपरमेश्वरौ ॥

यदन्नादिभिः पञ्चभिः कोशजालैः शिरःपक्षपुच्छात्मकैरन्तरन्तः ।
निगूढे महायोगपीठे निषण्णं पुरारेरथान्तःपुरं नौमि नित्यम् ॥ २ ॥

யதந்நாதிபி: பஞ்சபி: கோஶஜாலை:
ஶிர:பக்ஷபுச்சாத்மகைரந்தரந்த: ।
நிகூடே மஹாயோகபீடே நிஷண்ணம்
புராரேரதாந்த:புரம் நௌமி நித்யம் ॥

பதவுரை :—अथ-பிறகு, शिरःपक्षपुच्छात्मकैः - சிரஸ், இறக்கை, வால், உடல் இவையாகிய, अन्नादिभिः - அன்னகோசம் முதலிய, पञ्चभिः - ஐந்து, कोशजालैः - கோசங்களால் (அன்னமய, ப்ராணமய, மனோமய, விஜ்ஞானமய, ஆனந்தமய கோசங்களால்), निगूढे- மறைந்திருக்கிற, अन्तरन्तः - உள்ளுக்குள்ளே இருக்கும், महायोगपीठे-உயர்ந்த யோகபீடத்தில், निषण्णम् - வீற்றிருக்கிற, पुरारेः - பரமசிவனுடைய, यत् अन्तः- पुरम् - தர்மபத்னியாக விளங்கும் எந்த அம்பாளின் ஸ்வரூபம் இருக்கிறதோ (तत्) அந்த ஸ்வரூபத்தை, नित्यम्-எப்பொழுதும், नौमि-துதிக்கிறேன்.

கருத்து :—உலகிலுள்ள பொருள்களை ஜடம் சேதனம் என்று இரு விதமாகக் கூறலாம். அதில் சேதனம் என்பது ஈச்வரன் ஜீவன் என்று இரு

வகைப்படும். முதல் ச்லோகத்தில் ஈச்வரஸ்வரூபம் வர்ணித்தாயிற்று. இங்கு ஜீவஸ்வரூபம் வர்ணிக்கப்படுகிறது. ஜீவன் என்பது சரீரத்துக்குள் அடங்கிய ஒளிவடிவமான சைதன்யமே. அதுவே சரீரம் பிராணன் இந்திரியம் எல்லாவற்றையும் விளங்கச் செய்கிறது. சரீரம் ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்று மூன்று வகைப்படும். ஸ்தூலம் என்பது, தலைமுதல் கால்வரையில் உள்ள கண்ணுக்குப் புலப்படுகிற சரீரம். ஸூக்ஷ்மம் என்பது, இந்த ஸ்தூல சரீரத்துக்குள் விளங்கும் ப்ராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம் என்ற மூன்று சரீரங்கள். இதை லிங்கசரீரம் என்றும் சொல்லுவார்கள். காரண சரீரம் என்பது, எல்லாவற்றுக்கும் காரணமான அஜ்ஞானம். இந்த மூன்றையும் ஐந்து கோசங்களாகத் தைத்திரீய உபநிடதம் நிரூபிக்கிறது. கோசம் என்பது, கத்திக்கு உறைபோல் ஜீவனைக் காப்பாற்றுவதற்காக உள்ள ஒரு கருவி.

ஐந்து கோசங்களாவன-அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம், ஆனந்தமயம் என்பவை. காரண சரீரமான அஜ்ஞானத்தை முக்கியமாகக் கொண்ட ஸுஷுப்தி தசையில் பிரபஞ்சத்தின் தோற்றம் சிறிதளவும் இல்லாததனால் ஆத்மாவின் ஆனந்த ஸ்வரூபம் நன்கு விளங்குகிறது. ஆகையினால் அதை ஆனந்தமய கோசம் என்று சொல்லுகிறார்கள். இந்த ஐந்து கோசங்களையும் பக்ஷியாக ரூபணம் செய்து, சிரஸ், இறக்கை, உடல், வால் உள்ளதாக நிரூபித்திருக்கிறது. இவ்

விதமுள்ள ஐந்து கோசங்களுக்கும் உள்ளே இருந்துகொண்டு ஐந்தையும் பிரகாசப்படுத்துவது ஆத்ம ஸ்வரூபம். இவ்விதம் தைத்திரீய உபநிஷத்தில், 'तत्सृष्ट्वा, तदेवानु प्राविशत्' என்றும் 'स वा एष पुरुषोऽन्नरसमयः' என்றும் ஆரம்பித்துக் கூறியிருக்கிறது. இவ்விதம் ஜீவனுகவும் பிரகாசிப்பது அம்பாளின் ஸ்வரூபமே என்று இங்கே சொல்லியிருக்கிறது.

विरिञ्चादिरूपैः प्रपञ्चे विहृत्य स्वतन्त्रा यदा स्वात्मविश्रान्तिरेषा ।
तदा मानमातृप्रमेयातिरिक्तं परानन्दमीडे भवानि त्वदीयम् ॥ ३ ॥

விரிஞ்சாதிரூபை: ப்ரபஞ்சே விஹ்ருத்ய
ஸ்வதந்த்ரா யதா ஸ்வாத்மவிச்ராந்திரேஷா ।
ததா மாநமாத்ருப்ரமேயாதிரிக்தம்
பராநந்தமீடே பவாநி த்வதீயம் ॥

**பதவுரை:—भवानि** - பரமசிவனின் மனைவியே, **एषा** - இத்தகைய நீ, **स्वतन्त्रा** - ஸ்வதந்த்ரையாக இருந்துகொண்டு, **विरिञ्चादिरूपैः** - பிரம்மதேவன் முதலிய உருவங்களை எடுத்து, **प्रपञ्चे** - உலகத்தில், **विहृत्य** - விளையாடிவிட்டு, **यदा** - எப்பொழுது, **स्वात्मविश्रान्तिः** - தன் ஸ்வரூபத்திலேயே களைப்பாறியவளாக இருக்கிருயோ, **तदा** - அப்பொழுதுள்ள, **मानमातृप्रमेयातिरिक्तम्** - அறிவின் கருவி, அறிபவன், அறியப்படும் பொருள் என்ற த்ரிபுடியற்ற, **त्वदीयम्** - உன்னுடையதான, **परानन्दम्** - பேரானந்தத்தை, **ईडे** - துதிக்கிறேன்.

**கருத்து:**- அம்பாள் பிரபஞ்சத்துக்குக் காரணம் என்பது முதல் சுலோகத்தில் கூறப்பெற்றது.

இரண்டாவது ச்லோகத்தில் ஜீவர்களாகப் பிரகா சிக்கிருள் என்பது நிரூபிக்கப்பெற்றது. இந்த ச்லோகத்தில், ப்ரஹ்மாதி தேவர்களாக உருவ மெடுத்து உலகில் விளையாடி உலகைத் தனக்குள் அடக்கிக்கொள்ளுகிருள் என்பது கூறப்படுகிறது. 'न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते' என்ற உபநிஷத்தின் தீர்மானப்படி மேற்பட்ட பொருள் இல்லாததால் ஸ்வதந்த்ரையாக உள்ள பரதேவதை இவ்வுலகத் தைப் படைக்கவேண்டுமென்று ஸங்கல்பிக்கிருள். உடனே மாயையினுல் ரஜோகுண ப்ரதானரான ப்ரஹ்மதேவராகவும் ஸத்த்வ குண ப்ரதானரான விஷ்ணுவாகவும், தமோகுண ப்ரதானரான ருத்ர ராகவும் தோன்றி உலகத்தை உண்டுபண்ணி அதில் விஹாரம் செய்து, கடைசியில் உபஸம்ஹாரம் செய்து, எல்லாவற்றையும் தனக்குள் அடக்கிக் கொண்டு, தான் ஒருத்தியாக இருந்துகொண்டு தன்னிடத்திலேயே களைப்பாறுகிருள். அப்பொ ழுது அளவற்ற ஆனந்தம் பிரகாசிக்கின்றது. அது கருவிக்குப் புலப்படாததனுல் அங்கு அறிவின் கருவி, அறிபவன், விஷயம் ஒன்றுமில்லை. உலகத் தில் வ்யவஹாரம் செய்யும்பொழுது விஷயங்களும் அதை அநுபவிப்பவனும், அதற்கு ஸாதனமான கண் காது முதலிய கருவிகளும் தோன்றுகின்றன. வ்யவஹாரமற்ற மோக்ஷ நிலையில் விஷயங்கள் இல்லாததனுல் மற்றவையும் தேவையில்லை. விஷய ஸம்பந்தமற்ற ஆனந்தம் அகண்டானந்தம். அதுதான் அம்பாளின் உண்மையான ஸ்வரூபம். அதை இந்த ச்லோகத்தில் அநுஸந்தானம் செய் கிருர். 'स भगवः कस्मिन् प्रतिष्ठित इति स्वे महिम्नि इति'

என்ற உபநிஷத்தின் கருத்தை स्वात्मविश्रान्तिः என்ற பதத்தினுல் விளக்குகிருர்.

विनोदाय चैतन्यमेकं विभज्य द्विधा देवि जीवश्शिवश्चेति नाम्ना ।
शिवस्यापि जीवत्वमापादयन्ती पुनर्जीवमेनं शिवं वा करोषि ॥ ४ ॥

விநோதாய சைதந்யமேகம் விபஜ்ய
த்விதா தேவி ஜீவஶ் ஶிவஶ்சேதி நாம்நா ।
சிவஸ்யாபி ஜீவத்வமாபாதயந்தீ
புநர்ஜீவமேநம் சிவம் வா கரோஷி ॥

பதவுரை: देवि - தேவியே, विनोदाय - விளையாட்டாக, एकं चैतन्यम् - அறிவு வடிவமான ஒன்ருன பரம்பொருளை, जीवः शिवः च इति - ஜீவன் ஈச்வரன் என்று, नाम्ना - பெயருள்ளவையாக, द्विधा - இரண்டு விதமாக, विभज्य - பிரித்து, शिवस्य अपि - ஈச்வரனுக்கும், जीवत्वम् - ஜீவத்தன்மையை, आपादयन्ती - உண்டுபண்ணுகிற வளாய், पुनः - மறுபடியும், एनम् - இந்த ஜீவனை, जीवम् - ஜீவனுகவோ, वा - அல்லது, शिवम् - ஈச்வரனுகவோ करोषि - செய்கிருய்.

கருத்து:—முன்பு சைதன்ய வடிவமான பரதேவதை ஈச்வரனுகவும் ஜீவனுகவும் தோன்றுகிருள் என்று கூறப்பெற்றது. ஜீவன் அம்பாளின் அருளால் மோக்ஷத்தை (பேரானந்த அநுபவத்தை) அடைகிருன். இல்லாவிடில் ஜீவனுகவே இருந்து கொண்டு துக்கத்தையே அநுபவிக்கிருன் என்றும், சுத்தமான சைதன்ய ஸ்வரூபத்தை ஈச்வரனுகவும் ஜீவனுகவும் தோற்ற வைக்கும் திறமையுள்ளவள் என்றும் அம்பாளின் மஹிமை இங்கே கூறியிருக்கிறது. இவ்விதம் ஈச்வரன் ஜீவன் ஜடப்பொருள்

என்ற பிரபஞ்சத்தைப் படைப்பதற்குச் சிறிதேனும் முயற்சி தேவையில்லை என்பதை विनोदाय என்ற பதத்தினால் அறிவிக்கிறார். 'लोकवत्तु लीला-कैवल्यम्' என்ற ஸூத்ரத்தில் வ்யாஸாசார்யர் இதை விளக்குகிறார். 'स्वेच्छया स्वभित्तौ विश्वमुन्मील-यन्ति (शक्तिसूत्रम् ।) लीलाक्लृप्तब्रह्माण्डमण्डला (ललितासहस्र-नाम) என்பதும் காண்க. ஒரே சைதன்ய ஸ்வரூபத்தை ஈச்வரன் ஜீவன் என்று வ்யவஹரிப்பது, ஒரே முகத்தைக் கண்ணாடியின் எதிரில் இருக்கும் பொழுது பிம்பம் ப்ரதிபிம்பம் என்று வ்யஹரிப்பதுபோல. மாயை என்பது கண்ணாடிபோல் சைதன்யப் ப்ரதிபிம்பத்தை ஏற்கக்கூடியது. ஜீவேச்வர பேதம் வாஸ்தவமல்ல என்பதை नाम्ना என்பதால் விளக்குகிறார்.

समाकुञ्च्य मूलं हृदि न्यस्य वायुं मनो भ्रूबिलं प्रापयित्वा निवृत्ताः ।
ततस्सच्चिदानन्दरूपे पदे ते भवन्त्यम्ब जीवाश्शिवत्वेन केचित् ॥ ५॥

ஸமாகுஞ்ச்ய மூலம் ஹ்ருதி ந்யஸ்ய வாயும்
மநோ ப்ரூபிலம் ப்ராபயித்வா நிவ்ருத்தா: ।
ததஸ் ஸச்சிதாநந்தரூபே பதே தே
பவந்த்யம்ப ஜீவாஶ்ஶிவத்வேந கேசித் ॥

பதவுரை :—अम्ब - தாயே, केचित् जीवाः - சில ஜீவர்கள், मूलम् - மூலாதாரத்தை, समाकुञ्च्य - வளைத்து, वायुम् - பிராணவாயுவை, हृदि - ஹ்ருதயத்தில் (அநாஹத ஸ்தானத்தில்), न्यस्य - வைத்து, मनः - மனத்தை, भ्रूबिलम् - புருவங்களின் நடுப்பாகத்தை (ஆஜ்ஞாசக்ரத்தை), प्रापयित्वा - அடையும்படி செய்து, निवृत्ताः - நிவ்ருத்தி யடைந்தவர்கள்

(நிவ்ருத்தி மார்க்கத்தில் ஈடுபட்டவர்கள்). ततः - பிறகு, ते - உன்னுடைய, सच्चिदानन्दरूपे - அழிவற்றதாயும் அறிவு வடிவமாயும் ஆநந்த ரூபமாயுமுள்ள ஸ்வரூபத்தில், शिवत्वेन - பரமசிவ ஸ்வரூபமாக, भवन्ति - ஆகின்றனர்.

கருத்து:—முன் ஶ்லோகத்தில் ஜீவன் அம்பாளின் அருளால் சிவஸ்வரூபத்தை யடைவதாகச் சொன்னார். இங்கு, அப்படி அடைவதற்கு யோகாப்யாஸமும் ஸாதனம் என்று கூறப்படுகிறது. சில ஜீவர்கள் யோகாப்யாஸ பலத்தினால் மூலாதாரத்தை வளைத்து ப்ராணாயாம பலத்தினால் ப்ராண வாயுவைக் கும்பகம் செய்து ஹ்ருதயத்தில் நிலையாக நிறுத்தி, வெகு காலம் செய்த அப்யாஸத்தினாலும் விஷயங்களில் வைராக்யத்தினாலும் விஷயங்களிலிருந்து மனத்தைத் திருப்பிப் புருவங்களின் நடுவிலுள்ள ஆஜ்ஞா சக்ரத்தில் நிலைபெறும்படி செய்து ஸம்ஸார வாழ்க்கையில் பற்றற்றவர்களாக இருக்கிறார்கள். இவ்விதம் செய்யும் யோகாப்யாஸ மஹிமையால் அம்பாளின் உண்மையான ஸச்சிதானந்த ரூபமான சிவ ஸ்வரூபத்தை அடைகிறார்கள். இவ்விதம் அடைந்தவர்கள் மறுபிறப்பை அடைவதில்லை. இந்த நிலையை அடைவது சுலபமல்ல; பல ஜன்மாக்களில் அம்பாளை ஆராதித்து அடையக்கூடியது. இது அரிது என்பதை, केचित् என்ற பதத்தினால் விளக்குகிறார்.

சரீரத்தில் மூலாதாரம், ஸ்வாதிஷ்ட்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞை என்று

ஆறு ஸ்தானங்கள் உள்ளன. ஆறு சக்ரங்கள் என்றும் சொல்வதுண்டு. இவற்றுக்கு மேல் ப்ரஹ்மரந்த்ரம் உள்ளது. மூலாதாரத்திலிருந்து ப்ரஹ்மரந்த்ரம் வரை நீண்டுள்ளது குண்டலினீ சக்தி.

"भुजङ्गाकाररूपेण मूलाधारं समाश्रिता ।
शक्तिः कुण्डलिनीनाम बिसतन्तुनिभा शुभा ।
मूलकन्दं फणाग्रेण दृष्ट्वा कमलकन्दवत् ।
मुखेन पुच्छं संगृह्य ब्रह्मरन्ध्रं समाश्रिता ॥"

புஜங்காகார ரூபேண மூலாதாரம் ஸமாச்ரிதா ।
சக்திः குண்டலினீநாம பிஸதந்துநிபா சுபா ॥
மூலகந்தம் பணாக்ரேண த்ருஷ்ட்வா கமலகந்தவத் ।
முகேந புச்சம் ஸங்க்ருஹ்ய ப்ரஹ்மரந்த்ரம் ஸமாச்ரிதா ॥

இவ்விதம் வாமகேச்வர தந்த்ரத்தில் கூறப்பட்டுள்ளது.

பத்மாஸனத்தில் அமர்ந்து யோகாப்யாஸ பலத்தினால் மூலாதாரத்தை வளைத்து, குண்டலினீ சக்தியைக் கிளப்பிவிட வேண்டும். பிறகு ப்ராணவாயுவை ப்ராணாயாம பலத்தினால் கும்பகம் செய்து ஹ்ருதயத்தில் நிறுத்தி, மனத்தை ஆஜ்ஞா சக்ரத்தில் வைத்துத் தியானம் செய்பவன் ப்ரஹ்மரந்திரத்திலுள்ள ஸஹஸ்ரார கமலத்தில் பிரகாசிக்கும் அம்பாளின் உண்மையுருவமான ஸச்சிதானந்த சிவஸ்வரூபத்தை அடைகிறான். இது மோக்ஷநிலை. இதை அடைந்தவர்கள் மறுபிறப்பை அடைவதில்லை என்பது

வாமகேச்வர தந்த்ரம் முதலியவற்றில் கூறப்பட்டுள்ளது.

"पद्मासनगतः स्वस्थो गुदमाकुञ्च्य साधकः ।
वायुमूर्ध्वगतिं कुर्वन् कुम्भकाविष्टमानसः ॥
वाय्वाघातवशादग्निः स्वाधिष्ठानगतो ज्वलन् ।
ज्वलनाघातपवनाघातैरुन्निद्रितोऽहिराट् ॥
रुद्रग्रन्थिं ततो भित्त्वा विष्णुग्रन्थिं भिनत्त्यथ ।
ब्रह्मग्रन्थिं च भित्त्वैव कमलानि भिनत्ति षट् ॥

பத்மாஸநகத: ஸ்வஸ்த: குதமாகுஞ்ச்ய ஸாதக: ।
வாயுமூர்த்வகதிம் குர்வந் கும்பகாவிஷ்டமாநஸ: ॥
வாய்வாகாதவசாதக்நி: ஸ்வாதிஷ்டாநகதோ ஜ்வலந் ।
ஜ்வலநாகாதபவநாகாதை ருந்நித்ரிதோஹிராட் ॥
ருத்ரக்ரந்திம் ததோ பித்த்வா விஷ்ணுக்ரந்திம் பிநத்தியத் ।
ப்ரஹ்மக்ரந்திம் ச பித்த்வைவ கமலாநி பிநத்தி ஷட் ॥

सहस्रकमले शक्तिः शिवेन सह मोदते ।
सा चावस्था परा ज्ञेया सैव निर्वृतिकारणम् ॥

—वाम. तन्त्रे

महीं मूलाधारे कमपि मणिपूरे हुतवहम् ॥ सौन्द. ९ श्लो.

ஸஹஸ்ரகமலே சக்தி: சிவேந ஸஹ மோததே ।
ஸா சாவஸ்தா பரா ஜ்ஞேயா ஸைவ நிர்வ்ருதிகாரணம் ॥

—வாம. தந்த்ர.

மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம் ।

—ஸௌந்தர்ய. 9 ச்லோ.

இந்த ச்லோகத்தில் இந்த விஷயம் விளங்குகிறது.

शरीरेऽतिकष्टे रिपौ पुत्रवर्गे सदा भीतिमूले कलत्रे धने वा ।
न कश्चिद्विरज्यत्यहो देवि चित्रं कथं त्वत्कटाक्षं विना तत्त्वबोधः ॥ ६ ॥

**சரீரேதிகஷ்டே ரிபௌ புத்ரவர்கே**
**ஸதா பீதிமூலே களத்ரே தநே வா ।**
**ந கஸ்சித் விரஜ்யத்யஹோ தேவி சித்ரம்**
**கதம் த்வத்கடாக்ஷம் விநா தத்வபோத: ॥**

பதவுரை:—अतिकष्टे - மிகவும் கஷ்டத்தைக் கொடுப்பதும், सदा भीतिमूले - எப்பொழுதும் பயத்தை உண்டுபண்ணுவதுமான, शरीरे - உடலிலும், रिपौ - எதிரியினிடத்திலும், पुत्रवर्गे - பிள்ளைகளிடத்திலும், कलत्रे - மனைவியினிடத்திலும், धने वा - பொருளிலும், कश्चित् - ஒருவரும், न विरज्यति - வைராக்யத்தை அடைவதில்லை. अहो चित्रम् - என்ன ஆச்சரியம். देवि - தேவியே, त्वत्कटाक्षम् विना - உனது கடைக்கண் பார்வையில்லாமல், तत्त्वबोधः - உண்மையான அறிவு (ஆத்ம்ஜ்ஞானம்), कथम् - எவ்விதம் உண்டாகும்?

கருத்து:—முன் ச்லோகத்தில், யோகாப்யாஸ மஹிமையினுல் (மோக்ஷத்தை) அம்பாளின் ஸ்வரூபத்தை அடையலாமென்று கூறினுர். இங்கு வைராக்யத்தையடைந்து அதன் மூலம் தத்த்வ ஞானத்தைப்பெற்று மோக்ஷமடையலாம் என்பதை விளக்குகிருர்.

உலகத்திலுள்ள பொருள்களில் வைராக்யம் (ஆசையின்மை) ஏற்பட அவற்றில் தோஷங்களைக் காணவேண்டும். அதன் உண்மையை அறிந்தால் தோஷங்கள் புலப்படும். உண்மையறிவது (தத்த்வஜ்ஞானம்) அம்பாளின் அருளால் ஏற்படுகிறது. அம்பாளுக்கு ப்ரஹ்மவித்யை என்று பெயர். இந்த்ராதி தேவர்களுக்குத் தத்த்வோபதேசம் செய்தாள் என்று கேனோபநிஷத்தில் கூறுகிறது. ஆகையினால் அம்பாளின் அருள்பெற்றவர் தத்த்வஜ்ஞானத்தையடைந்து வைராக்யத்தை அடையலாம். **कथं त्वत्कटाक्षं विना तत्त्वबोधः** என்பதனால் இதை விளக்குகிறார்கள்.

அம்பாளின் அநுக்ரஹம் பெறாதவர்கள் பண்டிதர்களாயினும் மோஹத்துக்கு வசமாகிறார்கள்; வைராக்யமடைவதில்லை.

"ज्ञानिनामपि चेतांसि देवी भगवती हि सा ।
बलादाकृष्य मोहाय महामाया प्रयच्छति ॥" —दे. मा.

ஜ்ஞாநிநாமபி சேதாம்ஸி தேவீ பகவதீ ஹி ஸா ।
பலாதாக்ருஷ்ய மோஹாய மஹாமாயா ப்ரயச்சதி ॥
—தே. மா.

ஆகையினால் பரதேவதையின் ப்ரஸாதத்தை அடைந்து மனம் தெளிந்து புத்ர மித்ர களத்ராராமங்களில் வைராக்யத்தை அடைந்தால் நிலைபெற்ற மனத்தில் அம்பாளின் ஸ்வரூபம் விளங்குகிறது. அதுவே பேரானந்தம்; அதுவே ஜன்ம ஸாபல்யம்.

இங்கு, தத்த்வஜ்ஞானமில்லாமல் வைராக்யம் ஏற்படுவதில்லை என்று கூறுவதனால், வைராக்யத்துக்கு தத்த்வஜ்ஞானம் காரணம் என்று ஏற்படுகிறது வேதாந்த சாஸ்த்ரத்தில் தத்த்வஞானத்துக்கு ஸாதன சதுஷ்டய ஸம்பத்தே காரணம் என்று கூறுகிறது. ஸாதன சதுஷ்டயம் என்பதில் வைராக்கியம் அடங்கியது. ஆகையினால் தத்துவஞானத்துக்கு வைராக்யம் காரணம் என்று ஏற்படுகிறது. ஆகவே தத்துவ ஞானம் வைராக்கியத்துக்குக் காரணமா, வைராக்கியம் தத்துவஞானத்துக்குக் காரணமா என்று ஸந்தேஹம் ஏற்படலாம். இதற்கு ஸமாதானம் இவ்விதம் சான்றோர்கள் கூறியுள்ளனர்,

'सत्यं ज्ञानमनन्तं ब्रह्म' என்ற உபநிஷத் வாக்யத்தையும், இந்த அர்த்தத்தை விளக்கும் புராணக் கதைகளையும் கேட்பவர்களுக்கு, அழிவற்றதாயும் ஆனந்தரூபமாயும் உள்ள ப்ரஹ்மத்தை அடைய வேண்டும் என்ற ஆவல் ஏற்படுகிறது. அடைவதற்கு உபாயம் யாதென்று ஆராயும்பொழுது, நித்யாநித்ய வஸ்து விவேகம், இஹாமுத்ரார்த்த பலபோகவிராகம், ஶமாதி ஷட்கம், மோக்ஷத்தில் ஆசை என்ற நான்கும் ஸாதனம் என்று சாஸ்திரத்தின்மூலம் அறிந்துகொள்ளுகிறார்கள். பிறகு வைராக்யம் முதலியன நிலைபெற்ற பின்பு வேதாந்த விசாரம் (ச்ரவணம்) மனனம் நிதித்யாஸனம் செய்து அபரோக்ஷ ஸாக்ஷாத்காரத்தை அடைகிறார்கள். இவ்விதம் அடையும்பொழுது, உபநிஷத் புராணங்கள் இவற்றைக் கேட்டபின்பு

ப்ரஹ்மஸ்வரூப ஜ்ஞானம் ஏற்படுகிறது என்று கூறினோம். இதை பரோக்ஷஜ்ஞானம் என்பர். இதன்பின் வைராக்கியத்தை அடைய முயலுகிறான். ஆகையினால் பரோக்ஷஜ்ஞானம் வைராக்கியத்துக்குக் காரணம். வைராக்கியமடைந்த பின் ச்ரவணாதிகள் செய்து அபரோக்ஷ ஞானத்தை அடைகிறான். இதுதான் மோக்ஷத்தைக் கொடுப்பது. இதற்குக் காரணம் வைராக்யம்.

இந்த ஶ்லோகத்துக்கு வேறுவிதமாயும் கருத்துக் கூறலாம். சரீரம் முதலியவற்றில் வைராக்யமடைந்து வேதாந்த விசாரம் செய்து மோக்ஷத்தை அடையலாம். இவ்விதம் நற்கதியை அடைவதற்கு உலகில் ஒருவரும் இல்லையே, தேவி, ஆச்சரியம்! ஆனந்தத்தை அநுபவிக்க ஒருவரும் முயலவில்லையே என்றார், न कश्चिन् विरज्यति என்பதால். अहो देवि चित्रम्. அல்லது வேறு விதமாயும் மோக்ஷத்தையடையலாம். 'ईश्वरप्रणिधानाद्वा' என்று யோக ஸூத்ரத்தில் சொன்னபடி ஈச்வரனை உபாஸித்து அவர் அநுக்ரஹம்பெற்று அதன் மூலமாகவும் மோக்ஷமடையலாம். அதற்கும் உன் அருள் இல்லாவிட்டால் எவ்விதம் மோக்ஷம் கிடைக்கும்? நீயேதானே ஈச்வரி என்பது कथं त्वत्कटाक्षं विना तत्वबोधः என்பதனால் விளக்குகிறார்.

இவ்விதம் இரண்டு விதமான அபிப்பிராயம் இங்கு த்வனிக்கிறது.

शरीरे धनेऽपत्यवर्गे कलत्रे विरक्तस्य सद्देशिकाऽऽदिष्टबुद्धेः ।
यदाकस्मिकं ज्योतिरानन्दरूपं समाधौ भवेत्तत्त्वमस्यम्ब सत्यम् ॥७॥

சரீரே தநேபத்யவர்கே களத்ரே
விரக்தஸ்ய ஸத்தேசிகாதிஷ்டபுத்தே: ।
யதாகஸ்மிகம் ஜ்யோதிராநந்தரூபம்
ஸமாதௌ பவேத் தத் த்வமஸ்யம்ப ஸத்யம் ॥

பதவுரை :—अम्ब-தாயே, शरीरे-சரீரத்திலும், धने-பொருளிலும், अपत्यवर्गे - குழந்தைகளிடத்திலும், कलत्रे - மனைவியினிடத்திலும், विरक्तस्य - வைராக்யத்தை அடைந்தவனும், सद्देशिकादिष्टबुद्धेः - சிறந்த ஆசிரியரின் உபதேசத்தால் தத்துவஞானத்தை அடைந்தவனுமான புருஷனுக்கு, समाधौ - ஸமாதி தசையில், आनन्दरूपम् - ஆனந்தவடிவமான, यत् ज्योतिः-எந்த ஒளி, आकस्मिकम्-திடீரென்று ஏற்பட்டு, भवेत् - விளங்குகின்றதோ, तत् - அது, त्वम् असि - நீயாக இருக்கிறாய், सत्यम् - உண்மை.

கருத்து :—முன் ச்லோகத்தில், அம்பாளின் அருளால் தத்துவஞானம், வைராக்கியம் முதலியன ஏற்படுவதைக் கூறினார். அவ்விதம் அருள் பெற்றவருக்கு ஆசாரிய உபதேசத்தினால் தத்துவ ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. தத்துவ ஸாக்ஷாத்காரத்தைப் பெற்ற மஹான் உலகத்தை மறந்து ஸமாதி நிலையை அடைகிறார். அந்த ஸமாதி நிலையில் பரம்பொருள் ஒளிவடிவமாயும் ஆனந்தரூபமாயும் விளங்குகிறது. அவ்விதம் விளங்கும் தேஜஸ் நீதான் என்று அம்பாளை உலகுக்குக் காரணமான ப்ரஹ்ம ஸ்வரூபமாக இங்கு வர்ணிக்கின்றார்.

“ आचार्याद्धैव विद्या विदिता साधिष्ठं प्रापत् ।

ஆசார்யாத்தைவ வித்யா விதிதா ஸாதிஷ்டம் ப்ராபத் ।

என்ற உபநிடத வாக்கியமும்,

“उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥”

உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிநः ॥

என்ற கீதா வாக்கியமும் இங்கு அநுஸந்திக்கத் தகுந்தவை.

मृषाऽन्योऽमृषाऽन्यः परो मिश्रमेनं परः प्राकृतं चापरो बुद्धिमात्रम् ।
प्रपञ्चं मिमीते मुनीनां गणोऽयं तदेतत्त्वमेवेति न त्वां जहीमः ॥ ८ ॥

ம்ருஷாந்யோம்ருஷாந்ய: பரோ மிச்ரமேநம்
பர: ப்ராக்ருதம் சாபரோ புத்திமாத்ரம் ।
ப்ரபஞ்சம் மிமீதே முநீநாம் கணோயம்
ததேதத் த்வமேவேதி ந த்வாம் ஜஹிம: ॥

பதவுரை:—एनं प्रपञ्चम् - இந்த உலகத்தை, अन्यः- ஒரு முனிவர், मृषा - உண்மையல்ல என்றும், अन्यः- மற்ருெருவர், अमृषा - உண்மை என்றும், परः - மற்ருெருவர், मिश्रम्-மெய்யும் பொய்யும் கலந்தது என்றும், परः - மற்றுமொருவர், प्राकृतम् - பிரகிருதி என்ற மாயையினுல் வந்தது என்றும், अपरः - வேருெருவர், बुद्धिमात्रम्-அறிவுமயமானது என்றும், अयं मुनीनां गणः - இந்த முனிவர்களின் கூட்டம், मिमीते - நினைக்கிறது. तदेतत् - இவ்விதம் பலவிதமாக நினைக்கப்படுகிற உலகம், त्वमेव - நீயே தான், इति - என்று (என்பதால்), त्वाम् - உன்னை, न जहीमः - விடமாட்டோம் (மறக்க மாட்டோம்).

கருத்துரை:—இந்த ச்லோகத்தில், பல விதமாகத் தோன்றும் உலகத்தைத் தோற்றவைப்ப

வள் ப்ரதேவதை என்று பிரபஞ்சத்துக்கு அதிஷ்டானமாக அம்பாளை அநுஸந்திக்கிறார். ஒரு வஸ்துவின் உண்மை புலப்படாவிட்டால் அது பலவிதமான தோற்றத்தை அளிக்கும். அஸ்தமான காலத்தில் ஜனங்கள் செல்லும் பாதையில் கிடக்கும் பழுதை (கயிறு)யைப் பழுதை என்று அறியாவிட்டால் அது சிலருக்குச் சர்ப்பமாகவும், மற்றும் சிலருக்கு ஜலத்தின் கோடாகவும், சிலருக்குப் பூமியின் வெடிப்பாகவும், பலவிதமான தோற்றத்தை அளிக்கிறது. அதுபோல் உலகத்தின் உண்மை விளங்காத வரையில் பலவிதமான தோற்றம் ஏற்படுகிறது.

பௌத்த மதத்தைச் சேர்ந்த சிலர் (माध्यमिक சூனியவாதிகள்) இந்த உலகத்தைச் சூனியம், பொய் என்று கூறுகின்றனர். மற்றும் சிலரான மீமாம்ஸை மதத்தைத் தழுவியவர்கள் உண்மை, எப்பொழுதும் அழிவதில்லை; இவ்விதமே எப்பொழுதும் தோன்றுகிறது; ஸ்ருஷ்டி ப்ரளயம் கிடையாது என்றனர். அத்வைத ஸித்தாந்தத்தை அநுஸரிப்பவர்கள், 'பொய்யும் மெய்யும் கலந்தது உலகம்; அதாவது ஒரு கோபுரத்தைப் பார்க்கிறோம்; பார்க்கும்பொழுது அது இருக்கிறது, அது விளங்குகிறது, அது அழகாக (ஸந்தோஷகரமாக) இருக்கிறது என்று நினைக்கிறோம். அங்கே கோபுரம் என்ற பெயரும் அதன் உருவமும் ஜடப்பிரபஞ்சத்தைச் சேர்ந்தது. இருத்தல் விளங்குதல் ஆனந்தம் என்ற மூன்றும் ஸச்சிதாநந்த ரூபமான ப்ரஹ்மத்தைச் சேர்ந்தது. ஆகையினால் உண்மை

யான ப்ரஹ்மமும் மித்யையான பிரபஞ்சமும் கலந்துதான் வ்யவஹரிக்கப்படுகிறது' என்று கூறுகின்றனர். "सत्यानृते मिथुनीकृत्य अहमिदं ममेदमिति नैसर्गिको यो लोकव्यवहारः" என்பது பகவத்பாதாசார்யர்களின் பாஷ்யம். மற்றும் சிலரான ஸாங்க்யர்கள், பிரதானம் என்ற பிரக்ருதியை உலகத்துக்குக் காரணமாகவும், அதனுல் உலகத்தை ப்ராக்ருதம் என்றும் கூறுகின்றனர். மற்றும் பௌத்த மதத்தைத் தழுவிய சில விஜ்ஞானவாதிகள் உலகம் அறிவுமயமானது; அறிவே பல பொருள் வடிவமாகத் தோன்றுகிறது என்றனர். இவ்விதம் பல விதமாக விகல்பிக்கப் படுகிற உலகம் நீதான். ஒரு வஸ்து பலவிதமாய்த் தோன்றினுல் எல்லாம் உண்மையல்ல; உண்மையல்லாதது தோன்றுவது ப்ரமம் எனப்படும்; ப்ரமம் என்ருல் அதிஷ்டானம் ஒன்று வேண்டும்; அந்த அதிஷ்டானம் உண்மை; அதில் தோன்றுவது மித்யை. பழுதை உண்மை. அதில் தோன்றுவதெல்லாம் பொய். அதுபோல் பரப்ரஹ்ம ஸ்வரூபிணியான அம்பாள் உண்மை; அங்கே தோன்றும் பிரபஞ்சம் உண்மையல்ல. ஆகையினுல் உன்னையே சரணமடைகிரேும் என்று துதிக்கிருர்.

निवृत्तिः प्रतिष्ठा च विद्या च शान्तिः तथा शान्त्यतीतेति पञ्चीकृताभिः ।
कलाभिः परे पञ्चविंशात्मिकाभिस्त्वमेकैव सेव्या शिवाभिन्नरूपा ॥ ९ ॥

நிவ்ருத்தி: ப்ரதிஷ்டா ச வித்யா ச ஶாந்தி:
தத்தா ஶாந்த்யதீதேதி பஞ்சீக்ருதாபி: ।
கலாபி: பரே பஞ்சவிம்ஶாத்மிகாபி:
த்வமேகைவ ஸேவ்யா சிவாபிந்நரூபா ॥

பதவுரை:—परे - பரா என்று விளங்கும் தேவியே, निवृत्तिः - நிவ்ருத்தி, प्रतिष्ठा - ப்ரதிஷ்டை, विद्या - வித்யை, शान्तिः - சாந்தி, तथा - அவ்விதமே, शान्त्यतीता इति - சாந்தியதீதை என்றும், पञ्चीकृताभिः - ஐந்து விதமாக உள்ள, पञ्चविंशात्मिकाभिः - பஞ்ச விம்சன் என்ற ஜீவ ஸ்வரூபமாக இருக்கிற, कलाभिः - கலைகளால், त्वं एकैव - நீ ஒருத்தியே, सेव्या - பஜனம் செய்யத் தகுந்தவள்.

नादेवो देवमर्चयेत् என்றபடி ஒரு தேவதையைப் பூஜிப்பவன் அந்தத் தேவதையின் தாத்தாத்ம்யத்தை அடைய வேண்டும். அவ்விதம் தாதாத்ம்யத்தைப் பெற ஒரு குருவினிடமிருந்து மந்த்ரோபதேசம் பெற்று; தீக்ஷாந்யாஸங்கள் செய்விக்கப் பட வேண்டும். குரு தீக்ஷை செய்விக்கும்பொழுது சிஷ்ய சரீரத்தில் பாதம் முதல் சிகைவரை இந்த ச்லோகத்தில் குறிப்பிட்ட நிவ்ருத்தி முதலிய கலைகள் இருப்பதாகப் பூதசுத்தி செய்கிறார். பிறகு உபாஸகன், ச்லோகத்தில் கூறியபடி, ஐந்து கலைகளுடன் தான் அபேதத்தை அடைகிறான். அதற்குப் பிறகு அம்பாளைப் பூஜிப்பதற்குத் தகுந்த அதிகாரியாகிறான். இவ்விதம் ஜீவ ஸ்வரூபத்தை அடைந்த ஐந்து கலைகளால் சிவனோடு ஒன்றாகப் பிரகாசிக்கிற பரதேவதை பூஜிக்கப்படுகிறாள் என்பது இந்த ச்லோகத்தில் விளங்குகிறது.

श्रीविद्यार्णवे भूतशुद्धिः ஸ்ரீ வித்யார்ணவே பூதசுத்தி:

अथोच्यते कलात्मा सा दीक्षा दिव्यावदायिनी ।
कला निवृत्तिः प्रमुखा भूतानां पञ्च चेरिताः ॥

அதோர்ச்யதே கலாத்மா ஸா தீக்ஷா திவ்யாவதாயிநீ ।
கலாநிவ்ருத்தி: ப்ரமுகா பூதாநாம் பஞ்சசேரிதா: ॥

शिष्यकाये भूतमये वेधयेत्ता: क्रमात् सुधी: ।
पादादि जानुपर्यन्तं निवृत्ति: संस्थिता कला ॥

जान्वोस्सकाशादानाभि प्रतिष्ठाख्या कला स्मृता ।
नाभित: कण्ठपर्यन्तं विद्याख्या संस्थिता कला ॥

कण्ठतो ह्याललाटं तु शान्त्याख्या संस्थिता कला ।
फालाच्छिरोऽवधि प्रोक्ता शान्त्यतीता कला तथा ॥

ஶிஷ்யகாயே பூதமயே வேதயேத்தா: க்ரமாத் ஸுதீ: ।
பாதாதி ஜாநுபர்யந்தம் நிவ்ருத்தி: ஸம்ஸ்திதா கலா ॥

ஜாந்வோஸ்ஸகாஶாதாநாபி ப்ரதிஷ்டாக்யா கலாஸ்ம்ருதா ।
நாபித: கண்டபர்யந்தம் வித்யாக்யாஸம்ஸ்திதா கலா ॥

கண்டதோஹ்யாலலாடந்து ஶாந்த்யாக்யா ஸம்ஸ்திதா கலா ।
பாலாச்சிரோவதி ப்ரோக்தா ஶாந்த்யதீதா கலா ததா ॥

இந்தப் பஞ்சபூதமயமான சரீரத்தைத் தேவதா பூஜார்ஹமாகச் செய்ய இவ்விதம் பாவிக்க வேண்டும். பாதத்திலிருந்து முழங்கால் வரை நிவ்ருத்தி கலையும், அங்கிருந்து கொப்பூழ் வரை ப்ரதிஷ்டா கலையும், அதுமுதல் கழுத்துவரை வித்யாகலையும் அதுமுதல் நெற்றிவரை சாந்தி கலையும், அதுமுதல் சிரஸ்வரை சாந்த்யதீதை கலையும் இருப்பதாகப் பாவனை செய்ய வேண்டும்.

ஜீவனுக்குப் பஞ்சவிம்சன் (25-ஆவது) என்று பெயர். அது இவ்விதம் காரணமான மூலப்ரக்ருதி

1, மகத்தத்வம், அஹங்கார தத்வம், ப்ருதிவி, ஜலம் தேயு, வாயு, ஆகாயம் என்ற 7, ஞானேந்திரியம் 5, கர்மேந்திரியம் 5, ப்ராணன் 5, மனம் 1, ஆக 24. இந்த 24 தத்துவங்களைக் காட்டிலும் மேற்பட்ட ஜீவன் 25-ஆவது தத்துவம். இவனுக்கு மேற்பட்ட 26-ஆவது தத்துவம் பரமசிவ தத்துவம். அந்தச் சிவனுடன் ஒன்ருக உள்ள அம்பாளின் தத்துவமும் 26-ஆவது. அத்தகைய அம்பாளின் ஸ்வரூபம் உபாஸிக்கப்படுவதாக இங்கே கூறப்படுகிறது.

अगाधेऽत्र संसारपङ्के निमग्नं कलत्रादिभारेण खिन्नं नितान्तम् ।
महामोहपाशौघबद्धं चिरान्मां समुद्धर्तुमम्ब त्वमेकैव शक्ता ॥ १० ॥

அகாதேத்ர ஸம்ஸாரபங்கே நிமக்நம்
களத்ராதிபாரேண கிந்நம் நிதாந்தம் ।
மஹாமோஹபாசௌகபத்தம் சிராந் மாம்
ஸமுத்தர்த்துமம்ப த்வமேகைவ ஶக்தா ॥

**பதவுரை:**—अम्ब-தாயே, अगाधे-மிக்க ஆழமான, अत्र संसारपङ्के - இந்த ஸம்ஸாரமாகிய சேற்றில், निमग्नम् - மூழ்கியவனும், कलत्रादिभारेण - மனைவி, பிள்ளை, பொருள் முதலிய பாரத்தினுல், चिरात् - வெகு காலமாக, नितान्तम् - மிகவும், खिन्नम् - சோர்வடைந்தவனும், महामोहपाशौघबद्धम् - அறியாமையாகிய கயிற்ருல் கட்டப்பட்டவனுமான, माम् - என்னை, समुद्धर्तुं - கரையேற்றுவதற்கு, त्वं एकैव - நீ ஒருத்தியே, शक्ता - திறமையுள்ளவள்.

**கருத்து:**—உலக வாழ்க்கையைக் கடலாகவும், கானகமாகவும் பாழுங் கிணருகவும் வர்ணிப்பது சான்ருேர்களின் சம்பிரதாயம்.

"संसारकूपमतिघोरनिदाघमूलं संप्राप्य दुःखशतसर्पसमाकुलस्य ॥"

ஸம்ஸார கூபமதிகோரநிதாகமூலம்
ஸம்ப்ராப்ய துஃகஶதஸர்ப ஸமாகுலஸ்ய ।

—ந், ஸ்தோ. என்று ஆசார்ய பகவத்பாத ஸ்தோத்ரம். இங்கே சேருக வர்ணிக்கிருர். சேற்றில் விழுந்தால் கரையேறுவது கஷ்டம். நீரில் விழுந்தாலும் நீந்தி வரலாம். வாழ்க்கையை விட்டு வெளிவருவது மிகவும் கஷ்டமானபடியால் சேற்றில் விழுந்தவன் என்ருர். உபாயங்களைக் கொண்டு வெளிவர முயன்ருல் மனைவி பிள்ளை பொருளில் உள்ள ஆசை கருங்கல்லைச் சுமப்பதுபோல் கீழே அழுத்துகிறது. சேற்றில் விழுந்து தவிப்பவனுக்கு, தலையில் பாரமும் இருந்தால் எவ்விதம் வெளிவர முடியும்? இவ்வளவு இடையூறுகளையும் நீக்கி விவேக வைராக்கியம் இருந்தால் நற்கதியடையலாம். அது உண்டாகாமல் தடுக்க, மஹாமோஹம் என்ற அஜ்ஞானம் தாண்டவமாடுகிறது. சேற்றில் விழுந்தவனை வெளிவர முடியாமல் தடுக்கிறது அஜ்ஞானம். கயிற்றினுல் கட்டுவதுபோல் அஜ்ஞான பாசம் இவனைக் கட்டியிருக்கிறது. அஜ்ஞானம் உண்மையை மறைக்கிறது. உண்மை விளங்காவிட்டால் விவேக வைராக்யாதிகள் ஏற்படுவதில்லை. அஜ்ஞானத்தை அழிப்பவள் ப்ரஹ்ம வித்யா ரூபிணியான பரதேவதை ஒருத்தி தான் என்பதனுல் त्वमेकैव शक्ता நீ ஒருத்தியே திறமை யுள்ளவள் என்று கூறப்படுகிறது.

समारभ्य मूलं गतो ब्रह्मचक्रं भवद्दिव्यचक्रेश्वरीधामभाजः ।
महासिद्धिसङ्घातकल्पद्रुमाभानवाप्याम्ब नादानुपास्ते च योगी ॥ ११ ॥

ஸமாரப்ய மூலம் கதோ ப்ரஹ்மசக்ரம்
பவத்திவ்யசக்ரேச்வரீதாமபாஜ: ।
மஹாஸித்திஸங்காதகல்பத்ருமாபாந்
அவாப்யாம்ப நாதாநுபாஸ்தே ச யோகீ ॥

பதவுரை:—अम्ब - தாயே, योगी - யோகஸித்தி பெற்றவன், मूलं समारभ्य - மூலாதாரத்தில் ஆரம்பித்து, ब्रह्मचक्रम् - ப்ரஹ்ம சக்ர (ரந்த்ர)த்தை, गतः - அடைந்தவனாக, भवद्दिव्यचक्रेश्वरीधामभाजः - உனது திவ்ய சக்ரேச்வரிகளின் ஸ்தானத்தை அடைந்த. महासिद्धिसङ्घातकल्पद्रुमाभान् - அஷ்ட மஹாஸித்தியைக் கொடுக்கும் கல்ப வ்ருக்ஷம்போல் விளங்குகிற. नादान् - நாதங்களை, उपास्ते - உபாஸிக்கிறான்.

கருத்து:—மூலாதாரம் முதல் ஆறு சக்ரம் சரீரத்தில் உள்ளதாக முன்பு கூறினோம். யோகாப்யாஸ வசத்தால் மூலாதாரம் முதல் ப்ரஹ்ம ரந்த்ரம் வரை சென்று உபாஸிப்பவன் அஷ்டைச்வர்யத்தையும் அடைகிறான் என்று இங்கே கூறப்படுகிறது.

ஸ்ரீசக்ரம் அம்பாளின் ஸ்வரூபம்; ஸ்ரீசக்ரத்தில் தன் ஆவரண தேவதைகளுடன் பரதேவதை பிரகாசிக்கிறாள். அப்படியே ஸ்ரீவித்யா மந்த்ரத்திலும் அம்பாளின் ஸாந்நித்யம் இருக்கிறது. ஸ்ரீவித்யா மந்த்ரத்தினால் ஸ்ரீசக்ரத்தில் அம்பாளை உபாஸிப்பவனது சரீரத்திலும் தன் ஆவரண தேவதையுடன் அம்பாளின் ஸாந்நித்யம் ஏற்படுகிறது. ந்யாஸம் செய்யும்பொழுது தனது சரீரத்தில் அந்த அந்த அவயவங்களில் அந்த அந்தத்

தேவதைகள் இருப்பதாகத் தியானம் செய்கிறன். ஸ்ரீசக்ரத்தில் பிரதானமாய் விளங்குகிற நவ சக்ரேச்வரிகளும் தனது சரீரத்தில் இருக்கிறபடியால் முறைப்படி அநுஸந்தானம் செய்யும் பொழுது பரதேவதையின் அநுக்ரஹத்தால் அஷ்டைச்வர்ய ஸித்திகளையும் அடைகிறன்.

ஸ்ரீசக்ரத்தில் 64 கோடி தேவதைகளும் வஸிக்கிறர்கள். 9 சக்ரங்கள் இருக்கிறபடியால், அதற்கு நவ சக்ரம் என்றும் பெயர் உண்டு. அந்தப் பூஜையினல் ஸர்வ ஸித்திகளையும் பெறலாம். த்ருட சரீரத்துடன் தீர்க்காயுஸ்ஸுடன் விளங்கலாம் என்று பரமசிவன் தேவியிடம் கூறுகிறர்.

ललिताचक्रनवके प्रत्येकं शक्तय: प्रिये ।
चतुष्षष्टिर्मता: कोट्य: तास्सम्भूय पुरोदिता: ॥

नवयोन्यात्मकमिदं चिदानन्दघनं महत् ।
चक्रं नवात्मकमिदं नवधा भिन्नमन्त्रकम् ॥

बैन्दवासनसंरूढसंवर्तानलचिद्घनम् ।
अम्बिकारूपमेवेदं अष्टारस्थं स्वरावृतम् ॥

त्रैलोक्यमोहनं चक्रं सर्वाशापरिपूरकम् ।
सर्वक्षेमकरं देवि सर्वसौभाग्यदायकम् ॥

सर्वार्थसाधकं चक्रं सर्वरक्षाकरं तथा ।
सर्वरोगहरं गौरि सर्वसिद्धिमयं तथा ॥

सर्वानन्दमयं चापि नवमं श्रृणु सुन्दरि ।
अत्र पूज्या महादेवी महात्रिपुरसुन्दरी ॥

परिपूर्णं महाचक्रमजरामरकारकम् ॥ इति ॥

एते बिन्द्वाद्युन्मनान्ताः भागाः देहे मन्त्रे च साधारणाः चक्रे
च साधारणा एव ॥ —वा. से.

லலிதாசக்ரநவகே ப்ரத்யேகம் ஶக்தய: ப்ரியே ।
சதுஷ்ஷஷ்டிர்மதா: கோட்ய: தா: ஸம்பூய புரோதிதா: ।

நவயோந்யாத்மகமிதம் சிதாநந்த கநம் மஹத் ।
சக்ரம் நவாத்மகமிதம் நவதா பிந்நமந்த்ரகம் ॥

பைந்தவாஸந ஸம்ருட ஸம்வர்தாநல சித்கநம் ।
அம்பிகாரூபமேவேதம் அஷ்டாரஸ்தம் ஸ்வராவ்ருதம் ॥

த்ரைலோக்ய மோஹநம் சக்ரம் ஸர்வாஶாபரிபூரகம் ।
ஸர்வக்ஷேமகரம் தேவி ஸர்வஸௌபாக்யதாயகம் ॥

ஸர்வார்த்த ஸாதகம் சக்ரம் ஸர்வரக்ஷாகரம் ததா ।
ஸர்வ ரோகஹரம் கௌரி ஸர்வஸித்திமயம் ததா ॥

ஸர்வாநந்தமயம் சாபி நவமம் ஶ்ருணு ஸுந்தரி ।
அத்ர பூஜ்யா மஹாதேவீ மஹாத்ரிபுரஸுந்தரீ ॥

பரிபூர்ணம் மஹாசக்ரமஜராமரகாரகம் ॥ —இதி.

ஏதே பிந்த்வாத்யுந்மநாந்தா: பாகா: தேஹே மந்த்ரேச ।
ஸாதாரணா: சக்ரேச ஸாதாரணா ஏவ ॥ —வா. ஸே.

**நவசக்ரேச்வரிகள் :**

१. त्रिपुरा, २. त्रिपुरेशी, ३. त्रिपुरसुन्दरी,
४. त्रिपुरवासिनी, ५. त्रिपुराश्री, ६. त्रिपुरमालिनी,
७. त्रिपुरा सिद्धिः, ८. त्रिपुराम्बा, ९. महात्रिपुरसुन्दरी.

**நவ நாதங்கள்:**

१. नादः, २. बिन्दुः, ३. कला, ४. ज्येष्ठा, ५. रौद्री, ६. वामा, ७. विषघ्नी, ८. दूतरी, ९. सर्वानन्दा.
नादादयः नवदेवताविशेषाः चक्रे क्रमात् स्थिताः। —भास्करः.
पूजयेच्च क्रमादेताः नवचक्रे पुरोदिते ॥ वा. से.

गणेशैर्ग्रहैरम्ब नक्षत्रपङ्क्त्या तथा योगिनीराशिपीठैरभिन्नम् ।
महाकालमात्मानमामृश्य लोकं विधत्से कृतिं वा स्थितिं वा महेशि॥१२॥

கணேசைர் க்ரஹைரம்ப நக்ஷத்ரபங்க்த்யா
ததா யோகிநீராசிபீடைரபிந்நம் ।
மஹாகாலமாத்மாநமாம்ருச்ய லோகம்
விதத்ஸே க்ருதிம் வா ஸ்திதிம் வா மஹேசி ॥

பதவுரை:—**अम्ब** - தாயே, **गणेशैः** - ஐம்பத்தொரு கணேசர்களோடும், **ग्रहैः** - ஸூர்யன் முதலிய ஒன்பது க்ரஹங்களோடும், **नक्षत्रपङ्क्त्या** - அச்வினி முதலிய இருபத்தேழு நக்ஷத்ரங்களோடும், **तथा** - அவ்விதமே, **योगिनीराशिपीठैः**-ஏழு யோகினிகள் பன்னிரண்டு ராசிகள் ஐம்பத்தொரு பீடதேவதைகள் இவர்களோடும், **अभिन्नम्** - (157 – தேவர்களுடன்) ஒன்ருக உள்ள, **महाकालम्** - மஹாகால ரூபியான, **आत्मानम्** - உனது ஆத்ம ஸ்வருபத்தை, **आमृश्य** - விமர்சனம் செய்து, **लोकम्** – உலகத்தை, **विधत्से** - ஸ்ருஷ்டிக்கிருய், **स्थितिं** - பரிபாலனத்தையும், **कृतिं वा** - பிராணிகளிடம் இருந்து காரியத்தையும் (செய்கிருய்).

இந்த ச்லோகத்தில் குறிப்பிட்ட 157 தேவதைகள் ரூபமாக அம்பாள் ஸ்ரீசக்ரத்தில் பூஜிக்கப்படு

கிருள். [சரீரத்தின் பாகங்களாகிய கைகால் முதலிய அவயவங்கள் சேர்ந்து ஒரு தேஹம் என்பது போல் அம்பாளின் பரிவார (அங்க) தேவதைகளுடன் சேர்ந்து ஒருத்தியாகப் பரதேவதை பிரகாசிக்கிருள்.] இவ்விதம் இருந்து உலகத்தைப் படைப்பதையும் பரிபாலனம் செய்வதையும் பிராணிகளின் ஹ்ருதயத்தில் இருந்துகொண்டு கார்யங்களைச் செய்வதையும் விளையாட்டாகச் செய்கிருள்.

அம்பாளை உபாஸிப்பவர்களும் தமது சரீரத்தில் இந்தத் தேவதைகள் இருப்பதாக ந்யாஸம் செய்ய வேண்டும். இது லகு ஷோடா ந்யாஸம் எனப்படும். இதைப்பற்றிய விவரங்களை, குரு மூலம் அறிய வேண்டும்.

गणेशग्रहनक्षत्रयोगिराशिस्वरूपिणीम् ।
देवीं मन्त्रमयीं नौमि मातृकारूपधारिणीम् ॥
एवं विश्वप्रथाकारा चक्ररूपा महेश्वरी ।
देव्या देहो यथा प्रोक्तो गुरुर्देहस्तथैव च ॥
तत्प्रसादाच्च शिष्योऽपि तद्रूपस्सन् प्रकाशते ॥ —वा. त.

கணேஶக்ரஹ நக்ஷத்ரயோகிராஶிஸ்வரூபிணீம் ।
தேவீம் மந்த்ரமயீம் நௌமி மாத்ருகாரூபதாரிணீம் ॥
ஏவம் விஶ்வப்ரதாகாரா சக்ரரூபா மஹேஶ்வரீ ।
தேவ்யாதேஹோயதாப்ரோக்தோ குருர்தேஹஸ்ததைவச ।
தத்ப்ரஸாதாச்ச ஶிஷ்யோபி தத்ரூபஸ்ஸந் ப்ரகாஶதே ॥

157 தேவதைகளையும் விவரித்தால் விஸ்தாரமாகுமென்று விவரிக்கவில்லை. குரு முகம் அறியலாம்.

இவ்விதம் ந்யாஸம் செய்து அம்பாளை உபாஸிப்பவர்கள் தேவதாபாவத்தை அடைகிறார்கள்; இவர்களை எல்லோரும் வணங்க வேண்டும்.

गणेशः प्रथमो न्यासः द्वितीयस्तु ग्रहैर्मतः ।
नक्षत्रैस्तु तृतीयः स्यात् योगिनीभिश्चतुर्थकः ॥

राशिभिः पञ्चमो ज्ञेयः षष्ठः पीठैर्निगद्यते ।
षोढा न्यासस्त्वयं प्रोक्तः सर्वत्रैवापराजितः ॥

एवं यो न्यस्तगात्रस्तु स पूज्यस्सर्वयोगिभिः ।
नास्त्यस्य पूज्यो लोकेषु पितृमातृमुखो जनः ॥

स एव पूज्यस्सर्वेषां स स्वयं परमेश्वरः ॥ —वा. त.

கணேஶ: ப்ரதமோ ந்யாஸ: த்விதீயஸ்து க்ரஹைர்மத: ।
நக்ஷத்ரைஸ்து த்ருதீய: ஸ்யாத் யோகிநீபிஶ்சதுர்தக: ॥
ராஶிபி: பஞ்சமோ ஜ்ஞேய: ஷஷ்ட: பீடைர்நிகத்யதே ।
ஷோடா ந்யாஸஸ்த்வயம் ப்ரோக்த: ஸர்வத்ரைவாபராஜித: ॥
ஏவம் யோ ந்யஸ்தகாத்ரஸ்து ஸ பூஜ்யஸ்ஸர்வயோகிபி: ।
நாஸ்த்யஸ்ய பூஜ்யோ லோகேஷு பித்ருமாத்ருமுகோ ஜந: ॥
ஸ ஏவ பூஜ்யஸ்ஸர்வேஷாம் ஸ ஸ்வயம் பரமேஶ்வர: ।

लसत्तारहारां अतिस्वच्छचेलां वहन्तीं करे पुस्तकं चाक्षमालाम् ।
शरच्चन्द्रकोटिप्रभाभासुरां त्वां सकृद्भावयन् भारतीवल्लभः स्यात् ॥१३॥

லஸத்தாரஹாராம் அதிஸ்வச்சசேலாம்
வஹந்தீம் கரே புஸ்தகம் சாக்ஷமாலாம் |
சரச்சந்த்ரகோடிப்ரபாபாஸுரம் த்வாம்
ஸக்ருத் பாவயந் பாரதீவல்லப: ஸ்யாத் ||

**பதவுரை:**—लसत्तारहाराम् - நன்கு ஒளிர்கின்ற ஹாரத்தை அணிந்தவளும், अतिस्वच्छचेलाम् - மிகத் தூய்மையான ஆடையை அணிந்தவளும், करे - கையில், पुस्तकम् - புஸ்தகத்தையும், अक्षमालां च - ருத்ராக்ஷ மாலையையும், वहन्तीं - தரிக்கின்றவளும், शरच्चन्द्रकोटिप्रभाभासुराम् - சரத்காலத்திலுள்ள கோடி சந்திரர்களின் பிரகாசம்போல் விளங்குபவளுமான, त्वाम् - உன்னை, सकृत् - ஒரு தடவை, भावयन् - தியானம் செய்பவன், भारतीवल्लभः - ஸரஸ்வதிக்குப் பிரியனுக (சிறந்த பண்டிதனுக), स्यात् - ஆவான்.

**கருத்து:**—இங்கு ஸரஸ்வதியாகப் பிரகாசிக்கிற அம்பாளைத் தியானம் செய்பவர் சிறந்த பண்டிதராக ஆகின்றனர் என்று கூறுகிறுர்கள்.

கல்விக்கு அதிஷ்டான தேவதை ஸரஸ்வதி. ஸரஸ்வதியை வர்ணிக்கும் இடங்களில் அவள் நிறம் வெளுப்பு, ஆடை வெளுப்பு, ஜபமாலை வெளுப்பு, வீற்றிருக்கும் தாமரை வெளுப்பு என்று வெண்மையில் அதிக ப்ரியமாகச் சொல்லுகிறுர்கள்.

"भासा कुन्देन्दुशंखस्फटिकमणिनिभा",
"या कुन्देन्दुतुषारहारधवला या शुभ्रवस्त्रावृता"
பாஸா குந்தேந்து ஶங்கஸ்படிகமணிநிபா |
யா குந்தேந்துதுஷாரஹாரதவலா யா ஶுப்ரவஸ்த்ராவ்ருதா ||

குந்த புஷ்பம், சந்திரன், சங்கம், ஸ்படிகம் இவை போன்ற காந்தியுள்ளவள்; குந்த புஷ்பம்

சந்திரன் பனி இவை போன்ற ஹாரத்தைத் தரிப்பதனால் வெண்மையாயும், வெண்மையான வஸ்திரத்தை தரிப்பவளாயும் உள்ளவள் என்று. வெண்மையைத் தூய்மைக்கு அடையாளமாகக் கூறுவதுண்டு. இங்கு, சரத் காலத்தில் பிரகாசிக்கிற கோடிக் கணக்கான சந்திரர்களின் காந்தியை அம்பாளின் காந்திக்கு ஒப்பிடுகிறார்கள். மழைக்காலம் ஆனபிறகு மேகங்களின் ஸஞ்சாரம் இல்லாததனால் சரத்காலத்தில் வானம் மிகவும் சுத்தமாக இருக்கும். களங்கமற்ற வானத்தில் சந்திரன் முழு ஒளியுடன் பிரகாசிக்கிறான். இவ்விதம் பூர்ணிமையன்று காணலாம். ஒரு சந்திரன் உலகம் முழுவதையும் மகிழ்விக்கும் போதுகோடிக்கணக்கான சந்திரர்கள் சேர்ந்தால் எவ்விதம் இருக்கும் என்பதை நினைத்தாலும் புலப்படாது; இதை உபமானமாகக் கொடுப்பது அபூதோபமை எனப்படும்.

இவ்விதம்,

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भास्सदृशी सा स्याद् भासस्तस्य महात्मनः ॥

திவி ஸூர்ய ஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபதுத்திதா ।
யதி பா: ஸத்ருஶீ ஸா ஸ்யாத் பாஸஸ்தஸ்ய மஹாத்மந: ॥

என்று பகவத் கீதையில் ஜகத்காரணமான பரம் பொருளுக்கு ஆயிரக்கணக்கான ஸூர்யர்களின் ஒளியை உபமானமாகச் சொல்லியிருக்கிறது. ஸூர்ய சந்திரர்களின் பிரகாசம் ஒரே மாதிரி இருந்தாலும் ஸூர்ய ப்ரகாசம் தாபத்துடன் கூடியது;

சந்திரனின் பிரகாசமோ குளிர்ச்சியுடன் கூடியது. அம்பாளின் காந்திக்கு உபமானமாய்க் கொடுப்பது குளிர்ச்சியாக இருக்க வேண்டுமென்று, சந்திரகாந்தியை உபமானமாகக் கொடுக்கிறார்கள். இவ்விதம் தேஹகாந்தியும், முத்துமாலை முதலான ஆபரணங்களின் காந்தியும், வெண்மையான ஆடையின் காந்தியும், ஆஸனமான தாமரையின் காந்தியும் வெளுப்பானவை. வெளுப்பாயும் தூய்மை பொருந்தியுமுள்ள தெய்வத்தைத் தியானம் செய்தால் மனமும் தோஷங்கள் விலகித் தெளிவடைகிறது. மனம் தெளிந்தால் கல்வி விளங்குகிறது. ஆதலால் அம்பாளின் அருள் பெற்றவன் சிறந்த பண்டிதனாகிறான் என்பதை, भारतीवल्लभः स्यात् என்பதால் குறிப்பிடுகிறார்.

समुद्यत्सहस्रार्कबिम्बाभवक्त्रां स्वभासैव सिन्दूरिताजाण्डकोटिम् ।
धनुर्बाणपाशाङ्कुशान् धारयन्तीं स्मरन्तः स्मरं वापि संमोहयेयुः ॥१४॥

ஸமுத்யத்ஸஹஸ்ரார்க்கபிம்பாபவக்த்ராம்
ஸ்வபாஸைவ ஸிந்தூரிதாஜாண்டகோடிம் ।
தநுர்பாணபாசாங்குசாந் தாரயந்தீம்
ஸ்மரந்த: ஸ்மரம் வாபி ஸம்மோஹயேயு: ॥

பதவுரை :—समुद्यत्सहस्रार्कबिम्बाभवक्त्राम् - உதயமாகின்ற ஆயிரக்கணக்கான சூரிய பிம்பத்துக்குச் சமமான காந்தியுள்ள முகத்தையுடையவளும், स्वभासैव - தனது காந்தியினாலேயே, सिन्दूरिताजाण्डकोटिम् - ஸிந்தூரம் பூசப்பட்டதுபோல் செய்யப்பட்ட பிரம்மாண்ட கோடியையுடையவளும், धनुर्बाणपाशाङ्कुशान्-வில் அம்பு பாசம் அங்குசம் இவற்றை,

धारयन्तीम् - தரிப்பவளுமான (உன்னை), स्मरन्तः - நினைப்பவர்கள், स्मरं वापि-மன்மதனையும், सम्मोहयेयुः- மோகமடையும்படி செய்வார்கள்.

கருத்து:—ஆயுதங்களைத் தரித்து ஒளியைப் பரப்பி உலகத்தை மகிழ்வித்துக் காக்கும் தெய்வமான உலக மாதாவைத் தியானம் செய்வதனால் மன்மதனையும் மோஹிக்கும்படி செய்யலாம். மன்மதவிலாஸத்தில் ஈடுபட்டு இந்திரிய விஜயமில்லாமல், சம்சார வாழ்க்கையில் சிதறுகிற ஜனங்களுக்கு அம்பாளின் தியானம் சிறந்த ஓஷதியாய் விளங்குகிறது. மயக்கத்தைக் கொடுக்கும் மன்மதனை ஜயித்தால் மனம் தானாக அடங்கும். நீலகண்ட தீக்ஷிதர் என்ற மஹான், "அம்பாளின் கையிலுள்ள பாசம் அங்குசம் என்ற ஆயுதத்தை நினைத்தால் உலகத்தை வசீகரிக்கலாம். வில்லையும் அம்பையும் ஸ்மரித்தால் ஸுகாநுபவத்தை விரும்புபவன் அரசனாகலாம். துறவியானால் மோக்ஷமும் அணுகுகிறது' என்றார்.

पाशं सृणिं च करयोस्तव भावयन्तः
संस्तम्भयन्ति वशयन्ति च सर्वलोकम् ।
चापं शरं च सकृदम्ब तव स्मरन्तः
भूपालतां व्रजति भोगपथावतीर्णाः ॥

பாஶம் ஸ்ருணிஞ்ச கரயோஸ்தவ பாவயந்த:
ஸம்ஸ்தம்பயந்தி வஶயந்தி ச ஸர்வலோகம் ।
சாபம் ஶரஞ்ச ஸக்ருதம்ப தவ ஸ்மரந்த:
பூபாலதாம் வ்ரஜதி போகபதாவதீர்ணா: ॥

அம்பாளின் முகம் உதயமாகிற ஸௌர்யபிம்பம் போல் விளங்குகிறது என்பதனால் சிவந்த நிறமும் தாபமில்லாத நிலையும் அளவற்ற ஒளியும் அறிவிக்கப்படுகின்றன. அவளது காந்தியால் ப்ரஹ்மாண்டம் விளங்குகிறது என்பதனால், ஸௌர்ய சந்திராதிகளுக்கும் அவளே ஒளி கொடுப்பவள் என்கிற உபநிஷத் ஸித்தாந்தம் வெளியாகிறது. **तमेव भान्तमनुभाति सर्वम्.**

मणिस्यूतताटङ्कशोणास्यबिम्बां हरित्पट्टवस्त्रां त्वगुल्लासिभूषाम् ।
हृदा भावयन् तप्तहेमप्रभां त्वां श्रियो नाशयत्यम्ब चाञ्चल्यभावम्॥१५॥

மணிஸ்யூததாடங்கசோணாஸ்யபிம்பாம்
ஹரித்பட்டவஸ்த்ராம் த்வகுல்லாஸிபூஷாம் ।
ஹ்ருதா பாவயந் தப்தஹேமப்ரபாம் த்வாம்
ச்ரியோ நாசயத்யம்ப சாஞ்சல்யபாவம் ॥

பதவுரை :—**मणिस्यूतताटङ्कशोणास्यबिम्बाम्** - மணிகள் இழைத்த காதணியால் சிவந்த முகபிம்பத்தை யுடையவளும், **हरित्पट्टवस्त्राम्** - பச்சை நிறமுள்ள பட்டுவஸ்திரத்தைத் தரித்தவளும், **त्वगुल्लासिभूषाम्** - சரீரகாந்தியால் பிரகாசிக்கிற ஆபரணங்களை யுடையவளும், **तप्तहेमप्रभाम्** - உருக்கிய தங்கம் போன்ற காந்தியை யுடையவளுமான, **त्वाम्** — உன்னை, **हृदा** - மனத்தினால், **भावयन्** - தியானம் செய்பவன், **श्रियः** — லக்ஷ்மியின் (ஐச்வர்யத்தின்), **चाञ्चल्यभावम्** — சஞ்சல ஸ்வபாவத்தை, **नाशयति** — போக்கடிக்கிறான்.

செல்வம் ஓரிடத்தில் நிலைபெற்றிருப்பதில்லை என்பது பிரசித்தமானது. செல்வோம் என்பதே

செல்வம் என்று கூறப்படுகிறதென்றும் சொல்வதுண்டு. அம்பாளின் அருள் பெற்றவன் செல்வத்தின் சஞ்சல ஸ்வபாவத்தைப் போக்கடிக்கிறான். அவனிடம் செல்வம் நிலைபெற்றிருக்கிறது.

इत्थं संपूजयन् देवीं साक्षाद्वैश्रवणो भवेत् ॥ —अ. ति.

இத்தம் ஸம்பூஜயந் தேவீம் ஸாக்ஷாத் வைஶ்ரவணோ பவேத் ॥
—அ. தி.

அம்பாளைப் பூஜிப்பவன் குபேரனாக ஆகிறான் என்று கூறப்படுகிறது. தியானத்துக்கு உரிய ஸ்வரூபத்தை வர்ணிக்கிறார்கள். அம்பாளின் காதுகளிலுள்ள இரு தாடங்கங்களும் ஸ்ரீசக்ர ஸ்வரூபமானவை. இரத்தினங்கள் இழைக்கப்பெற்றவை. ஸ்ரீசக்ரோபாஸனம் ஐச்வர்யத்துக்கு ஸாதனம் என்பது பிரசித்தமானது. எல்லா தேவதைகளும் ஸ்ரீசக்ரத்தில் வஸிக்கிறார்கள். பச்சையாடை அணிந்திருக்கிறாள் தேவி. பசுமை நிறம் கண்ணுக்குக் குளுமையாக இருக்கும். உபாஸனத்தில் கிலேசமில்லை என்பது விளங்குகிறது. உலகில் ஆபரணம் அணிவது உடலின் அழகுக்காக; அம்பாளின் உடலழகு ஆபரணங்களுக்கு அழகைக் கொடுக்கின்றது. உருக்கிய தங்கம் போன்றது திருமேனியின் காந்தி.

हिरण्यवर्णां हरिणीं, तामग्निवर्णां तपसा ज्वलन्तीम् ।

ஹிரண்யவர்ணாம் ஹரிணீம், தாமக்நிவர்ணாம் தபஸாஜ்வலந்தீம் ।

இவ்விதம் அம்பாளைத் தியானம் செய்பவன் அழிவற்ற ஐச்வர்யத்தைப் பெறுகிறான்.

महामन्त्रराजान्तबीजं पराख्यं स्वतो न्यस्तबिन्दु स्वयं न्यस्तहार्दम् ।
भवद्वक्त्रवक्षोजगुह्याभिधानं स्वरूपं सकृद्भावयेत् स त्वमेव ॥ १६ ॥

மஹாமந்த்ரராஜாந்தபீஜம் பராக்யம்
ஸ்வதோ ந்யஸ்தபிந்து ஸ்வயம் ந்யஸ்தஹார்தம் ।
பவத்வக்த்ரவக்ஷோஜகுஹ்யாபிதாநம்
ஸ்வரூபம் ஸக்ருத் பாவயேத் ஸ த்வமேவ ॥

இங்கே காமகலா த்யானமும், அதற்குப் பயனை ஸாயுஜ்ய முக்தியும் கூறப்படுகின்றன. இந்த ச்லோகத்தின் பதார்த்த ஜ்ஞானம் உபாஸகர்கள் மூலம் அறியத் தகுந்தது; எழுதக் கூடியதல்ல. உபதேசம் பெருதவர்கள் ச்லோகத்தைச் சொல்லி ஸ்தோத்ரம் செய்தால் அம்பாளின் அருள் கிடைக்கிறது.

இதைப்பற்றி ஸ்ரீ பகவத்பாதாசார்யர் அவர்கள் ஸௌந்தர்யலஹரியில் கூறுகிறார்கள்—

मुखं बिन्दुं कृत्वा कुचयुगमधस्तस्य तदधो
हरार्धं ध्यायेद्यो हरमहिषि ते मन्मथकलाम् ।
स सद्यः संक्षोभं नयति वनिता इत्यतिलघु
त्रिलोकीमप्याशु भ्रमयति रवीन्दुस्तनयुगाम् ॥

बिन्दुं संकल्प्य वक्त्रं तु तदधःस्थं कुचद्वयम् ।
तदधः स परार्धं तु चिन्तयेत् तदधोमुखम् ॥

एवं कामकलारूपं अक्षरं यत् समुत्थितम् ।
कामादिविषमोक्षाणामालयं परमेश्वरि ॥

तदेव तत्वप्रवरं निजदेहं विचिन्तयेत् ॥ —वा. तन्त्र.

முகம் பிந்தும் க்ருத்வா குசயுகமதஸ்தஸ்ய தததः
ஹரார்தம் த்யாயேத்யோ ஹரமஹிஷி தே மந்மதகலாம் ।
ஸ ஸத்யः ஸம்க்ஷோபம் நயதி வநிதா இத்யதி லகு
த்ரிலோகீமப்யாசு ப்ரமயதி ரவீந்துஸ்தநயுகாம் ॥

பிந்தும் ஸங்கல்ப்ய வக்த்ரம் து தததஸ்தம் குசத்வயம் ।
தததः ஸ பரார்தம் து சிந்தயேத் தததோமுகம் ॥

ஏவம் காமகலாரூபம் அக்ஷரம் யத் ஸமுத்திதம் ।
காமாதிவிஷமோக்ஷாணாமாலயம் பரமேச்வரி ॥

ததேவ தத்வப்ரவரம் நிஜதேஹம் விசிந்தயேத் ॥

*காமகலா ரூபிணியான அம்பாளைத் தியானம் செய்வது மோக்ஷத்தைக் கொடுக்கிறது. காமாதிகளான புருஷார்த்தங்கள் விஷமாக ஆகின்றன; விஷம்போல் வெறுக்கத் தகுந்தவையாகின்றன என்பதை* **कामादिविष** *என்றும்,* **मोक्षाणां आलयं** *என்றும் கூறினார்கள். ஆசார்யரவர்களும்* **त्रिलोकीं भ्रमयति** *என்று அம்பாளின் தாதாத்ம்யத்தை இதற்குப் பயனாக வர்ணிக்கிறார்கள்.*

तथान्ये विकल्पेषु निर्विण्णचित्तास्तदेकं समाधाय त्रिन्दुत्रयं ते ।
परानन्दसन्धानसिन्धौ निमग्नाः पुनर्गर्भरन्ध्रं न पश्यन्ति धीराः ॥ १७ ॥

ததாந்யே விகல்பேஷு நிர்விண்ணசித்தா:
ததேகம் ஸமாதாய பிந்துத்ரயம் தே ।
பராநந்தஸந்தாநஸிந்தௌ நிமக்நா:
புநர்கர்ப்பரந்த்ரம் ந பச்யந்தி தீரா: ॥

*முன் ச்லோகம்போல் இந்த ச்லோகமும் பதார்த்தங்களைப் பற்றி, குருமுகமாக அறியத் தகுந்தது.*

ஸம்ஸார தாபத்தில் கஷ்டப்படுகிறவன் அம்பாளின் மஹாமந்த்ரோபதேசம் பெற்று, உபாஸனை மஹிமையினால் அம்பாளின் அருள்பெற்று, ஞான மஹிமையால் பேரானந்த ரூப மோக்ஷத்தை அடைகிறான். மறுபடி மாத்ருகர்ப்பவாஸத்தை அடைவதில்லை.

त्वदुन्मेषलीलानुबन्धाधिकारान् विरिञ्च्यादिकांस्त्वद्गुणांभोधिबिन्दून् ।
भजन्तस्तितीर्षन्ति संसारसिन्धुं शिवे तावकीना सुसंभावनेयम् ॥ १८ ॥

த்வதுந்மேஷலீலாநுபந்தாதிகாராந்
விரிஞ்ச்யாதிகாந் த்வத்குணாம்போதிபிந்தூந் ।
பஜந்தஸ் திதீர்ஷந்தி ஸம்ஸாரஸிந்தும்
சிவே தாவகீநா ஸுஸம்பாவநேயம் ॥

பதவுரை:—शिवे - தேவி, त्वदुन्मेषलीलानुबन्धाधिकारान् - உன் கண்களைத் திறக்கும் விளையாட்டின் வசமாகக் கிடைத்த அதிகாரத்தையுடைய, त्वद्गुणांभोधिबिन्दून् - உன் குணங்களாகிய சமுத்திர ஜலத்தின் திவலைகளாகிய, विरिञ्च्यादिकान्-பிரம்மதேவன் முதலியவர்களை, भजन्तः - சேவிப்பவர்கள், संसारसिन्धुम् - வாழ்க்கைக் கடலை, तितीर्षन्ति - கடக்க விரும்புகின்றனர். इयं सुसंभावना - இந்த மரியாதை, तावकीना - உன்னுடையதல்லவா?

கருத்து:—ப்ரஹ்மா முதலிய தேவர்கள் உலகத்தைப் படைப்பது முதலிய காரியங்களை அம்பாளின் கடாக்ஷத்தைப் பார்த்துச் செய்கின்றனர். இவர்கள் அவளால், உலகத்தின் உற்பத்தி ஸ்திதி நாசம் இவற்றைச் செய்வதற்குத் தன் லீலா வசத்தினால் உண்டுபண்ணப்பட்டவர்கள்; ஸத்வம் ரஜஸ்

தமஸ் என்ற குணங்களைப் பிரதானமாகக் கொண்டவர்கள். இவர்களைச் சேவிப்பவர்களே வாழ்க்கைக் கடலைக் கடக்கின்றனர். அம்பாளை நேரில் சேவிப்பவர்கள் அடையும் பயனைச் சொல்லவும் வேண்டுமா? பிரம்மதேவன் முதலியவர்கள் ஒரு விமானத்தில் சென்று புவனேச்வரியைத் தரிசனம் செய்யும் சமயம் ஸ்ரீமஹா ஸரஸ்வதி, மஹாலக்ஷ்மி, மஹாகாளி என்ற மூன்று தேவதைகளை ஆவிர்ப்பவிக்கச் செய்து, மூவரையும் விவாஹம் செய்து கொள்ளும்படி செய்து, இம்மூவர்களின் சகாயத்தால் சிருஷ்டி முதலிய காரியங்களைச் செய்யும்படி அருள் செய்கிருள். (தேவீ பாகவதம், ஸ்கந்தம் 3.)

ஸ்ரீ ராஜராஜேச்வரியின் பாதபீடத்தைச் சுற்றிலும் ப்ரஹ்மாதி தேவர்கள் சூழ்ந்துகொண்டு ஸேவிக்கின்றனர். அம்பாளின் அநுக்ரஹத்தால் ப்ரஹ்மாதி தேவர்களுக்கும் தம்முடைய உபாஸகனின் மனோரதத்தைப் பூர்த்தி செய்யும் சக்தி ஏற்படுகிறது என்பது तावकी सुसम्भावनेयं என்ற நூல் விளங்குகிறது.

கீழே சொன்ன விஷயங்கள் ஸ்காந்தத்திலும் ஸௌந்தர்ய லஹரியிலும் கூறப்பட்டுள்ளன.

**स्कान्दे पार्वतीं प्रति शिवः—**

ललिता श्रीमहादेवी महात्रिपुरसुन्दरी ।
पितामहमहेशाद्याः अस्याः पुत्रा वरानने ॥
अनयैव पुरा प्राप्ता ब्रह्मणा सर्वकर्तृता ।
विष्णुः पालनकर्तृत्वं प्राप्तवानेतया शिवः ॥ इत्यादि ।

जगत्सूते धाता हरिरवति रुद्रः क्षपयते
तिरस्कुर्वन्नेतत् स्वमपि वपुरीशस्तिरयति ।
सदापूर्वो देवस्तदिदमनुगृह्णाति च शिव-
स्तवाज्ञामालम्ब्य क्षणचलितयोः भ्रूलतिकयोः ॥

त्रयाणां देवानां त्रिगुणजनितानां तव शिवे
भवेत् पूजा पूजा तव चरणयोर्या विरचिता ।
तथा हि त्वत्पीठोद्वहनमणिपीठस्य निकटे
स्थिता ह्येते शश्वन्मुकुलितकरोत्तंसमुकुटाः ॥

—सौन्दर्यलहरी.

ஸ்காந்தே பார்வதீம் ப்ரதி ஶிவ:—

லலிதா ஸ்ரீ மஹாதேவீ மஹாத்ரிபுரஸுந்தரீ ।
பிதாமஹமஹேஶாத்யா: அஸ்யா: புத்ரா வராநநே ॥
அநயைவ புரா ப்ராப்தா ப்ரஹ்மணா ஸர்வகர்த்ருதா ।
விஷ்ணு: பாலநகர்த்ருத்வம் ப்ராப்தவாநேதயா ஶிவ: ॥ இத்யாதி ॥

ஜகத்ஸூதே தாதா ஹரிரவதி ருத்ர: க்ஷபயதே
திரஸ்குர்வந் ஏதத் ஸ்வமபி வபுரீஶஸ்திரயதி ।
ஸதாபூர்வோ தேவஸ்ததிதமநுக்ருஹ்ணாதி ச ஶிவ:
தவாஜ்ஞாமாலம்ப்ய க்ஷணசலிதயோ: ப்ருலதிகயோ: ॥

த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுணஜநிதாநாம் தவ ஶிவே
பவேத் பூஜா பூஜா தவ சரணயோர்வா விரசிதா ।
ததா ஹி த்வத்பீடோத்வஹநமணிபீடஸ்ய நிகடே
ஸ்திதா ஹ்யேதே ஶஶ்வத் முகுலிதகரோத்தம்ஸமுகுடா: ॥

—ஸௌந்தர்யலஹரீ.

कदा वा भवत्पादपोतेन तूर्णं भवाम्भोधिमुत्तीर्य पूर्णान्तरङ्गः ।
निमज्जन्तमेनं दुराशाविषाब्धौ समालोक्य लोकं कथं पर्युदासे ॥ १९ ॥

கதா வா பவத்பாதபோதேந தூர்ணம்
பவாம்போதிமுத்தீர்ய பூர்ணாந்தரங்க: |
நிமஜ்ஜந்தமேநம் துராசாவிஷாப்தெள
ஸமாலோக்ய லோகம் கதம் பர்யுதாஸே ||

பதவுரை :—भवत्पादपोतेन - *உன் பாதமாகிய பட்கி ஞல்,* भवाम्भोधिम् - *வாழ்க்கைக் கடலே,* तूर्णम् - *விரை வில்,* उत्तीर्य - *கடந்து,* पूर्णान्तरङ्गः - *நிரம்பிய மனத்தை யுடையவனுக (கவலையற்றவனுக),* कदा वा - *எப் பொழுது ஆவேன்?* दुराशाविषाब्धौ - *பேராசையாகிய விஷக் கடலில்,* निमज्जन्तम् - *மூழ்குகிற,* एनं लोकम् - *இந்த ஜனத்தை,* समालोक्य - *பார்த்து,* कथम् - *எவ் விதம்?* पर्युदासे - *அலக்ஷ்யம் செய்கிருய்?*

கருத்து :—*ஸ்ரீ கிருஷ்ண பகவான் பகவத்கீதை யில் மனிதனுக்கு இயற்கையான விரோதி காமம் (ஆசை) என்ருர். அதைத் திருப்தி பண்ணி வைப்பது யாராலும் முடியாத காரியம். ஆசைப் பட்ட விஷயத்தை நுகர்ந்தால் நெருப்பில் நெய் விடு வதுபோல் மேலும் மேலும் விருத்தியடைகிறது. விஷயங்களை நுகர நுகர ஆசை விருத்தியுடையுமே தவிரக் குறையாது. நெருப்பில் விறகுகளைப் போட்டாலும் அப்படியே. அதனுல் நெருப்புக்கு அநலம் என்று பெயர். அலம் என்ருல் போதும் என்று பொருள். அநலம் என்ருல், 'போதும் என்பது கிடையாது' என்பது பொருள்.* दुष्पूरेण अनलेन च *என்று பகவான் கூறுகிருர். மேலும்*

ஆசை காரணமாக, மனிதன் எந்தப் பாவத்தையும் துணிந்து செய்கிறான். அதனால் महापाप्मा என்கிறார். இங்கு மட்டும் விரோதியல்ல; லோகாந்தரத்திலும் நரகத்தைக் கொடுக்கிறான். மற்ற விரோதி அங்கு தீங்கு செய்வதில்லை. ஆதலால்,

"जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम्"
"काम एष क्रोध एषः रजोगुणसमुद्भवः।
महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम्॥
त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः।
कामः क्रोधस्तथा लोभः तस्मादेतत् त्रयं त्यजेत्"

ஜஹி ஶத்ரும் மஹாபாஹோ காமரூபம் துராஸதம் ।
காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோகுணஸமுத்பவ: ।
மஹாஶநோ மஹாபாப்மா வித்த்யேநமிஹவைரிணம் ॥
த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாஶநமாத்மந: ।
காம: க்ரோதஸ்ததா லோப: தஸ்மாத் ஏதத் த்ரயம் த்யஜேத் ॥

என்றும் பல முறை காமத்தை விலக்கச் சொல்லுகிறார் பகவத்கீதையில்.

காமம் க்ரோதம் லோபம் என்று கூறப்படுவது ஒரே பொருள்தான். ஒரு பொருளில் ஆசை ஏற்படுகிறது. அதை அநுபவிக்கும் சமயத்தில் தடங்கல் ஏற்பட்டால் உடனே க்ரோதமாக மாறுகிறது. ஆகையினால் காமமே க்ரோதம் லோபம் பேராசை. ஆசை மிஞ்சினால் பேராசை. அதுவும் காமத்தைக் காட்டிலும் வேறல்ல; ஆதலால் दुराशाविषाब्धौ என்று ஆசையை மட்டும் சொல்லி மற்றதைக் கூறவில்லை. ஆசையாகிய விஷ-

ஸமுத்ரம் என்பதனுல், கரை ஏற முடியாதது; அடிக்கடி துன்பத்தையும் கொடுக்கக்கூடியது என்பது விளங்குகிறது. அம்பாளின் சரணங்களைத் தியானம் செய்வதுதான் இந்தக் கடலைக் கடக்கப் படகு ஆகும். எல்லோருடைய மனக்கோயிலிலும் அம்பாள் வீற்றிருப்பதனுல், 'ஏன் அலக்ஷ்யம் செய்கிருய்? அருள் புரியக்கூடாதா? என்று கேட்கிருர்.

कदा वा हृषीकाणि साम्यं भजेयुः कदा वा न शत्रुर्न मित्रं भवानि ।
कदा वा दुराशाविषूचीविलोपः कदा वा मनो मे समूलं विनश्येत् ॥

கதா வா ஹ்ருஷீகாணி ஸாம்யம் பஜேயு:
கதா வா ந சத்ருர் ந மித்ரம் பவாநி ।
கதா வா துராசாவிஷூசீ-விலோப:
கதா வா மநோ மே ஸமூலம் விநச்யேத் ॥

பதவுரை :—कदा वा - எப்பொழுது, हृषीकाणि - இந்திரியங்கள், साम्यम् - சமநிலையை (விருப்பு வெறுப்பற்ற நிலையை), भजेयुः - அடையும்? कदा वा - எப்பொழுது, शत्रुः - எதிரியாகவோ, मित्रम् - நண்பனுகவோ, न भवानि - ஆகாமலிருப்பேன்? कदा वा - எப்பொழுது, दुराशाविषूचीविलोपः - பேராசையாகிய விஷூசீ ரோகத்தின் அழிவு ஏற்படும்? कदा वा - எப்பொழுது, मे - என்னுடைய, मनः-மனம், समूलम्, विनश्येत् - காரணத்துடன், நாசமடையும்?

கருத்து :—மனத்தைக் கொண்டுதான் மனிதன் ஸம்ஸார பந்தத்தையும் மோக்ஷத்தையும் அடைகிருன். चित्तमेव हि संसारः, मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः। என்பது சான்ருேர் வசனம். ஐம்புலன்

களும் மனத்தின் தூண்டுதலால் விஷயங்களைப் பற்றுகின்றன. தூண்டுகோலின்றித் தீபம் எரியாது. அதுபோல, மனத்தூண்டல் இல்லையானல் இந்திரியங்கள் வெளியே செல்லா. मनो हि हेतुस्सर्वेषां इन्द्रियाणां प्रवर्तने என்ருர் வால்மீகி முனிவர். பேராசை முதலிய கெட்ட குணங்கள் மனத்தில் உண்டாகின்றன. कामः संकल्पो... ...एतत् सर्वं मन एव என்பது ப்ருஹதாரண்யக உபநிஷத். நம்மைச் சேர்ந்த வஸ்துக்களிடம் விருப்பமும், சேராத வஸ்துக்களில் வெறுப்பும் மனத்தில்தான் உண்டாகின்றன. ஆதலால் மனமும் அதன் காரணமாகிய அஜ்ஞானமும் எப்பொழுது அழியும் என்று பிரார்த்திக்கிருர்.

அழகிய பொருளைக் கண்டால் விருப்பமும், விகாரமான வஸ்துவைக் கண்டால் வெறுப்பும், இனிய சப்தம் கேட்டால் ஸந்தோஷமும், கடுமையான சப்தம் கேட்டால் வேதனையும் உண்டாகின்றன. இதுபோல் ருசியுள்ள உணவு, ருசியற்ற உணவு, நறுமணம், துர்க்கந்தம் முதலியவற்றில் விருப்பு வெறுப்பு ஏற்படுகின்றன. இது இந்திரியங்களிலுள்ள தோஷத்திஞல் ஏற்படுகிறது. ஒரே நிலை ஏற்பட, இந்த்ரிய தோஷம் விலக வேண்டும். அதற்குக் காரணம் மனம். மனம் நாசமடைந்தால் இந்திரியங்கள் ஸமநிலையை அடையும். பிறகு ஒருவனிடம் சிநேகமும் மற்ருெருவனிடம் துவேஷமும் ஏற்படமாட்டா. அப்பொழுது ஒருவனுக்கு நண்பனுகவும் மற்ருெருவனுக்கு எதிரியாகவும் ஆகமாட்டான். பேராசை முதலிய

கொடிய எண்ணங்களும் ஏற்படா. எண்ணங்களுக்குக் காரணமான மனம் இல்லாததனுல் இந்த நிலையை ஜீவன்முக்தி என்பர். இவ்விதம் ஜடபரதர் இருந்ததாக ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது. நமது பாரத தேசத்தில் கொஞ்ச காலத்துக்கு முன்பு தோன்றிய ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்திரர்களுடைய அநுபவம் இவ்விதம் இருந்ததாகச் சரித்திரம் கூறுகிறது. ஒருஸமயம் அவருடைய மகிமை தெரியாத ஒருவன் அவர் கையை வெட்டியபொழுது இரத்த தாரை பெருகும் ஸமயத்திலும் முகம் விகாரமடையவில்லை என்று வரலாறு கூறுகிறது.

योऽनुत्पन्नविकारो बाहौ म्लेच्छेन छिन्नपतितेऽपि ।
अविदितममतायास्मै प्रणतिं कुर्मस्सदाशिवेन्द्राय ॥

யோநுத்பந்நவிகார: பாஹௌ ம்லேச்சேந சிந்நபதிதேபி ।
அவிதிதமமதாயாஸ்மை ப்ரணதிம் குர்ம: ஸதாசிவேந்த்ராய ॥

இந்த ச்லோகத்தில் भवानि என்ற பதத்தை க்ரியா பதமாகவும் வைத்துக்கொள்ளலாம். சம்போதனமாகவும் வைத்துக்கொள்ளலாம்.

नमोवाकमाशास्महे देवि युष्मत्पदाम्भोजयुग्माय तिग्माय गौरि ।
विरिञ्च्यादिभास्वत्किरीटप्रतोलीप्रदीपायमानप्रभाभास्वराय ॥ २१ ॥

நமோவாகமாசாஸ்மஹே தேவி யுஷ்மத்-
பதாம்போஜயுக்மாய திக்மாய கௌரி ।
விரிஞ்ச்யாதிபாஸ்வத்கிரீடப்ரதோலீ-
ப்ரதீபாயமாநப்ரபாபாஸ்வராய ॥

பதவுரை:—देवि गौरि-தேவி கௌரியே, विरिञ्च्यादिभास्वत्किरीट - प्रतोली - प्रदीपायमान - प्रभाभास्वराय -

பிரம்மதேவன் முதலியவர்களின் தலையில் பிரகாசிக்கும் கிரீடங்களின் வரிசைக்குத் தீபம்போல் விளங்கும் காந்தியுடன் விளங்குகிறதும், **तिग्माय** - நன்கு பிரகாசிக்கிறதுமான, **युष्मत्पदाम्भोजयुग्माय** – தாமரை போன்ற உன் இரு பாதங்களுக்கு, **नमोवाकम्** - நமஸ்காரச் சொல்லை (அளிக்க), **आशास्महे** - விரும்புகிறேன்.

**கருத்து** :—முன் ச்லோகத்தில் ஜீவன்முக்தி நிலையைக் கூறினர். இந்த ச்லோகத்தில் சரணாகதியைக் கூறுகிறார். சரணாகதி என்பது அகங்கார மமகாரங்களை விலக்கி அடிமைத்தனத்தை அறிவிக்கிறது. நமஸ்காரம் அதற்கு அறிகுறி. ஸ்ரீ கிருஷ்ணனுக்கு ஒரு தரம் நமஸ்காரம் செய்வது பத்து அசுவமேத யாகத்தின் பயனைக் கொடுக்கிறது என்று மஹாபாரதம் கூறுகிறது.

**"एको हि कृष्णस्य कृतः प्रणामः**
**दशाश्वमेधावभृथेन तुल्यः"**

ஏகோ ஹி க்ருஷ்ணஸ்ய க்ருத: ப்ரணாம: |
தஶாஶ்வமேதாவப்ருதேந துல்ய: ||

என்று.

ஸ்ரீ கிருஷ்ணன் லலிதா தேவியின் புருஷ உருவம் என்று த்ரிபுரதாபினீ உபநிடதம் கூறுகிறது.

कदाचिदाद्या ललिता पुंरूपा कृष्णविग्रहा ।
वंशनादविनोदेन करोति विवशं जगत् ॥

கதாசிதாத்யா லலிதா பும்ருபா க்ருஷ்ணவிக்ரஹா |
வம்ஶநாத விநோதேந கரோதி விவஶம் ஜகத் ||

புஷ்பதந்தர் என்ற சிறந்த சிவபக்தர், 'நான் ஜன்மத்தை அடைந்தபடியால் முன் ஜன்மத்தில் பரமேச்வரனை நமஸ்கரிக்கவில்லை என்று தெரிகிறது' என்ருர். அதனுல் நமஸ்காரம் செய்தால் மறுபிறப்பு இராது என்று தெரிகிறது. वपुःप्रादुर्भावा-दनुमितमिदं जन्मनि पुरा पुरारे न क्वापि क्वचिदपि भवन्तं प्रणतवान् ॥

யஜுர் வேதத்தில் மத்திய மணிபோல் விளங்கும் ஸ்ரீருத்ரம், பரமேச்வரனைப் பல முறை நமஸ்கரிக்கிறது. ஓர் எஜமானனிடம் வேலை செய்பவன் குற்றத்தைச் செய்தால் காலில் விழுந்து நமஸ்காரம் செய்து மன்னிப்புக் கோருகிருன். உலகுக்கு யஜமானியாயுள்ள பரதேவதையின் ஆஜ்ஞா ரூபமான வேத சாஸ்திரங்களில் சொன்ன நித்ய நைமித்திக கார்யங்களைச் சரிவரச் செய்யாதவர்களுக்கு, இந்த ச்லோகத்தைச் சொல்லி நமஸ்காரம் செய்வது அம்பாளின் ஆஜ்ஞோல்லங்கன தோஷம் விலகி அருள்பெறச் சாதனமாகும்.

அம்பாளின் சரணங்கள் தாமரைபோல் ஸுகந்தமாயும் ஸுகுமாரமாயும் உள்ளன. ப்ரஹ்மதேவன் முதலியவர்கள் அம்பாளுக்குக் குழந்தைகள் ஆதலால் பாதபீடத்தின் அருகில் நிற்கின்றனர். அவர்களின் தலையிலுள்ள கிரீடங்கள் அம்பாளுடைய பாதகாந்தியால் நன்ருகப் பிரகாசிக்கின்றன. அம்பாளின் பாதங்களில் அர்ச்சனை செய்வது ப்ரஹ்மாதி தேவர்களின் சிரஸ்ஸிலும் அர்ச்சனை செய்வதாக ஆகிறது என்று ஸ்ரீ பகவத்பாதாசார்யர் கூறுகிருர்.

त्रयाणां देवानां त्रिगुणजनितानां तव शिवे
भवेत् पूजा पूजा तव चरणयोर्या विरचिता ।
तथा हि त्वत्पादोद्वहनमणिपीठस्य निकटे
स्थिता ह्येते शश्वन्मुकुलितकरोत्तंसमुकुटाः ॥

—सौन्दर्यलहरी

த்ரயாணாம் தேவாநாம் த்ரிகுணஜநிதாநாம் தவ ஶிவே
பவேத் பூஜா பூஜா தவ சரணயோர் யா விரசிதா ।
ததா ஹி த்வத்பாதோத்வஹநமணிபீடஸ்ய நிகடே
ஸ்திதா ஹ்யேதே ஶஶ்வந் முகுலிதகரோத்தம்ஸமுகுடா: ॥

திருமலை நாயகன் அரசாங்கத்தில் அமைச்சர் பதவியை வஹித்த ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் என்ற சிறந்த சிவபக்தர், மதுரை மீனாக்ஷியம்பாளைத் துதிக்கும்பொழுது, 'அம்ப! பிரம்மதேவன் முதலியவர்கள் உன் குழந்தைகளானதால் ஒவ்வொருவரையும் எடுத்து மடியில் வைத்து அன்புடன் பாராட்டி வருகிறாய்; இவ்விதம் வரிசையாக வந்தால் எனக்கு அந்தப் பாக்கியம் என்று கிடைக்கும்? ஆனால் அசட்டுக் குழந்தையிடம் அம்மாவுக்கு அன்பு அதிகம் என்று பெரியோர் சொல்லுகின்றனர். அந்த நம்பிக்கையுடன் அவர்களுடன் நானும் நிற்கிறேன்' என்று கூறுகிறார்.

ब्रह्मेशकेशवमुखैर्बहुभिः कुमारैः
पर्यायतः परिगृहीतविमुक्तदेशम् ।
उत्संगमम्ब तव दास्यसि मे कदा त्वं
मातृप्रियं किल जडं सुतमामनन्ति ॥

ப்ரஹ்மேஶ கேஶவ முகை: பஹுபி: குமாரை:
பர்யாயத: பரிக்ருஹீதவிமுக்த தேஹம் ।
உத்ஸங்கமம்ப தவ தாஸ்யஸி மே கதா த்வம்
மாத்ருப்ரியம் கில ஜடம் ஸுதமாமநந்தி ॥

இவ்விதம் அம்பாளை நமஸ்கரித்தால் பிரம்மாதி தேவர்களையும் நமஸ்காரம் செய்ததாக ஆகிறது.

कचे चन्द्ररेखं कुचे तारहारं करे स्वादुचापं शरे षट्पदौघम् ।
स्मरामि स्मरारेरभिप्रायमेकं मदाघूर्णनेत्रं मदीयं निधानम् ॥ २२ ॥

கசே சந்த்ரரேகம் குசே தாரஹாரம்
கரே ஸ்வாதுசாபம் சரே ஷட்பதௌகம் ।
ஸ்மராமி ஸ்மராரேரபிப்ராயமேகம்
மதாகூர்ணநேத்ரம் மதீயம் நிதாநம் ॥

**பதவுரை :—कचे चन्द्रतारं** - *சிரஸ்ஸில் சந்திர கலையைத் தரித்தவளும்,* **कुचे तारहारम्** - *மார்பில் உயர்ந்த ஹாரங்களை அணிந்தவளும்,* **करे स्वादुचापं** - *கையில் இனிமையான (கரும்பை) வில்லை அணிந்தவளும்,* **शरे षट्पदौघम्** - *அம்பில் (புஷ்பபாணங்களில்) தேனீக்களின் கூட்டத்தையுடையவளும்,* **मदाघूर्णनेत्रम्** - *மதத்தினால் சுழலும் கண்களையுடையவளும்,* **मदीयं निधानम्** - *என்னுடையதான புதையல் போல் விளங்குகிற,* **स्मरारेः** - *பரமசிவனின்,* **एकं अभिप्रायम्** - *அன்புக்கு ஒரே லக்ஷ்யமாயுள்ள அம்பாளை,* **स्मरामि** - *நினைக்கிறேன்.*

**கருத்து :—***முன் ச்லோகத்தில் ஆத்மார்ப்பணம் என்ற சரணாகதி சொல்லப்பட்டது. இங்கு அதற்கு ஸாதனமான ஸ்மரணம் (நினைப்பது) கூறப்படு*

கிறது. இது ஸாதனங்களில் மூன்ருவதாகச் சொல்லப்பட்டது. ஒன்றை ஸ்மரிக்க வேண்டுமானல் மனம் அடங்க வேண்டும். மனம் ஏரியில் அடங்கிய நீர்போல் உள்ளத்தில் இருந்துகொண்டு வாய்க் கால் போன்ற இந்திரியங்களின் துவாரத்தினல் வெளியில் செல்லுகிறது. உலகில் சாதாரணமான ஒரு பொருளை ஸ்மரிப்பதற்கே மிகவும் ஜாக்கிரதையுடன் மனத்தை வெளியில் செல்லாமல் அடக்க வேண்டியிருக்கிறது. அவ்விதம் அடக்கினலும் கொஞ்ச நேரந்தான் முடியும். அம்பாளை எப்பொழுதும் ஸ்மரிக்க வேண்டுமானல் அம்பாளுடைய லீலாவிநோதங்களைப் பற்றிய கதைகளைக் கேட்க வேண்டும். பிறகு கேட்ட விஷயத்தை நினைத்துப் பார்க்க வேண்டும். பிறகு கொஞ்ச காலமாவது தியானம் செய்யவேண்டும். தியானத்தின் அப்யாஸ வசத்தால் மனம் ஸ்திரமாக நிற்க வேண்டும். இதை உபநிடதங்களில் ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் என்பர். இவ்விதம் மனம் நிலைபெற்ருல் அம்பாளை நேரில் காணலாம். நேரில் கண்ட ஸ்ரீ பகவத்பாதாசாரியர் நம்மிடம் கருணையுடன் கூறுகிருர். சந்திரகலை அம்பாளின் சிரஸ்ஸில் அலங்காரமாக விளங்குகிறது. எனது பிரகாசத்தினல் வெளியில் உள்ள இருளையும், தியானத்தினல் உள்ளேயுள்ள இருளையும் (அஜ்ஞானத்தையும்) போக்குகிறது. தேவி, மார்பில் உயர்ந்த ஹாரத்தை அணிந்திருக்கிருள். ஸ்திரீகளுக்கு மங்கள ஸூத்ரம் என்ற ஹாரம் மார்பில் இருப்பது ஸௌபாக்யத்தைக் காண்பிக்கிறது.

" कामेशबद्धमाङ्गल्यसूत्रशोभितकन्धरा ॥"

காமேஶபத்தமாங்கல்யஸூத்ரஶோபிதகந்தரா ।

(ललिता स.) என்று கழுத்துக்கு அலங்காரமாயும் வர்ணிப்பதுண்டு. காமனை எரித்த பரமசிவனின் மனத்தையும் வசீகரம் செய்யக்கூடிய ஸௌந்தர்யத்தால் பரமசிவனின் அன்புக்கு ஒரே லக்ஷ்யமாக, என்றும் பிரியாத அர்த்தநாரீச்வர ரூபமாக விளங்குகிருள். இவ்விதம் விளங்குபவள் எனக்குப் புதையல் போல் விளங்குகிருள் என்பதனுல், ஒரு வீட்டில் புதையல் இருந்தால் அங்குள்ளவன் அதையே எப்பொழுதும் நினைப்பது போல் எப்பொழுதும் ஸ்மரிக்கிறேன் என்பது விளங்குகிறது.

शरेष्वेव नासा धनुष्वेव जिह्वा जपापाटले लोचने ते स्वरूपे ।
त्वगेषा भवच्चन्द्रखण्डे श्रवो मे गुणे ते मनोवृत्तिरम्ब त्वयि स्यात् ॥ २३ ॥

சரேஷ்வேவ நாஸா தநுஷ்வேவ ஜிஹ்வா
ஜபாபாடலே லோசநே தே ஸ்வரூபே ।
த்வகேஷா பவச்சந்த்ரகண்டே ச்ரவோ மே
குணே தே மநோவ்ருத்திரம்ப த்வயி ஸ்யாத் ॥

பதவுரை :—अम्ब - தாயே, मे - என்னுடைய, नासा - மூக்கு, ते - உன்னுடைய, शरेष्वेव - அம்புகளாகிய புஷ்பங்களிலும், जिह्वा - நாக்கு, धनुष्वेव - வில்லாகிய கரும்புகளிலும், लोचने - இரு கண்கள், जपापाटले - செம்பருத்திப் புஷ்பம் போல் சிவந்த, ते स्वरूपे - உனது உருவத்திலும், एषा त्वक् - இந்த த்வகிந்திரியம் (தோல்), भवच्चन्द्रखण्डे - உனது

நிர்மால்யமான பச்சைக் கர்ப்பூரத்திலும், मे श्रवः - எனது காது, ते गुणे - உன் குணங்களைக் கேட்ப திலும், मनोवृत्तिः - மனத்தின் நினைவு, त्वयि - உன் னிடத்திலும், स्यात् - இருக்க வேண்டும்.

கருத்து :—முன்பு, மனம் நிலைபெற்று அம்பா ளைப் பற்றுவதைக் கூறினார். மனம் நிலைபெற இந்திரியங்கள் விஷயங்களில் இழுத்துச் செல்லா மல் இருக்க வேண்டும். விஷயங்களில் செல்லாம லிருக்க ஒவ்வோர் இந்திரியத்துக்கும் அம்பா ளிடத்தே விஷயத்தைக் கொடுக்கிறார்.

மூக்கு மணத்தை அறியும்; அம்பாளின் அம்புகள் புஷ்பங்கள்; அவற்றின் மணத்தை அறியட்டும். நாக்கு, சுவையை அறியும்; அம்பா ளின் கையிலுள்ள கரும்பின் சுவையை அறி யட்டும். கண்களுக்கு அம்பாளின் சிவந்த ரூபம் தோன்றட்டும். த்வக் என்ற இந்திரியம், அம்பா ளின் நிர்மால்ய சந்தனம் கர்ப்பூரம் முதலியவற் றின் சைத்யத்தை அறியட்டும். காது, அம்பா ளுடைய குணங்களைக் கேட்கட்டும். இவ்விதம் எல்லா இந்திரியங்களும் அம்பாளைப் பற்றும் பொழுது மனமும் தானாகவே அம்பாளிடம் செல்லுகிறது.

அளவு கடந்த ஐச்வர்யத்தையடைந்த அம்ப ரீஷ மகாராஜா தன் இந்திரிய வ்ருத்திகளையெல் லாம் பகவத் விஷயத்திலே ஈடுபடும்படி செய்த தாக, ஸ்ரீ பாகவதம் கூறுகிறது.

स वै मनः कृष्णपदारविन्दयोः वचांसि वैकुण्ठगुणानुवर्णने ।
करौ हरेर्मन्दिरमार्जनादिषु श्रुतिं चकाराच्युतसत्कथोदये ॥

मुकुन्दलिङ्गालयदर्शने दृशौ तद्भृत्यगात्रस्पर्शेऽङ्गसङ्गम् ।
घ्राणं च तत्पादसरोजसौरभे श्रीमत्तुलस्यां रसनां तदर्पिते ॥

चन्द्रखण्डः என்பது கர்ப்பூரத்தைச் சொல்லும். अथ कर्पूरमस्त्रियाम् । ९—४ घनसारश्चन्द्रसंज्ञः सिताभ्रो हिमवालुका । अमर. १३३४.

ஸ வை மந: க்ருஷ்ணபதாரவிந்தயோ:
வசாம்ஸி வைகுண்டகுணாநுவர்ணநே ।
கரௌ ஹரேர்மந்திரமார்ஜநாதிஷு
ஶ்ருதிம் சகாராச்யுதஸத்கதோதயே ॥

முகுந்தலிங்காலயதர்ஶநே த்ருஶௌ
தத்ப்ருத்ய காத்ர ஸ்பர்ஶேங்கஸங்கம் ।
க்ராணஞ்ச தத்பாதஸரோஜஸௌரபே
ஶ்ரீமத்துலஸ்யாம் ரஸநாம் ததர்பிதே ॥

—சந்த்ர கண்டம். அத கர்பூரமஸ்த்ரியாம் 9-4.

கநஸாரஶ்சந்த்ரஸம்ஜ்ஞ: ஸிதாப்போ ஹிமவாலுகா ॥

—அமரம் 1334.

जगत्कर्मधीरान् वचोधूतकीरान् कुचन्यस्तहारान् कृपासिन्धुपूरान् ।
भवाम्भोधिपारान् महापापदूरान् भजे वेदसारान् शिवप्रेमदारान् ॥

ஜகத்கர்மதீராந் வசோதூதகீராந்
குசந்யஸ்தஹாராந் க்ருபாஸிந்துபூராந் ।
பவாம்போதிபாராந் மஹாபாபதூராந்
பஜே வேதஸாராந் ஶிவப்ரேமதாராந் ॥

பதவுரை :—जगत्कर्मधीरान् - உலகத்தைப் படைக்கும் திறமை வாய்ந்தவளும், वचोधूतकीरान् - சொற்களால் அவமதிக்கப்பெற்ற கிளியின் குரலையுடையவளும், कुचन्यस्तहारान्-மார்பில் அணிந்த ஹாரங்களையுடையவளும், कृपासिन्धुपूरान् - கருணையாகிய நதியின் வெள்ளப் பெருக்கையுடையவளும், भवाम्भोधिपारान् - வாழ்க்கைக் கடலுக்கு அப்பாலுள்ளவளும், महापापदूरान् - மகாபாவங்களின் சம்பந்தமில்லாதவளும், वेदसारान् - வேதங்களின் ஸாரமாக உள்ளவளும், शिवप्रेमदारान् - பரமசிவனின் பேரன்புக்குப் பாத்திரமாய் விளங்குகிறவளுமான பார்வதியை, भजे - சேவிக்கின்றேன்.

கருத்து :—இங்கு அம்பாளிடம் மனம், வாக்கு, காயம் என்ற த்ரிகரணமும் அரிய சக்தி வாய்ந்தது என்பதை விளக்குகிறார். அம்பாளின் மனம் கருணையாகிய ஜலம் அடங்கிய கடல்போல் விளங்குகிறது. தன்னைச் சேவிப்பவர்களின் விருப்பங்களை நிறைவேற்றும் திறமை வாய்ந்தது. வாகிந்திரியம் இனிய சொற்களால் கிளிகளின் சொற்களையும் அவமதிக்கிறது. ஒரு சமயம் அம்பாளின் ஸந்நிதியில் ஸரஸ்வதி தேவி வீணையை வைத்துக்கொண்டு பரமசிவனின் குணங்களைப் பாட ஆரம்பித்தாள். அந்த இன்னிசையைக் கேட்ட பராசக்தி பரவசமடைந்து 'ஸாது' (ஸபாஷ்) என்று தன் சந்தோஷத்தைக் காண்பித்தாள். இந்த இனிய குரலைக் கேட்ட ஸரஸ்வதி, 'இந்த இனிய குரலையுடைய அம்பாளின் ஸந்நிதியில் நான் கானம் செய்யத் தகுதியற்றவள்' என்று கருதி, வீணையை உறையில் வைத்து மூடிவிட்டாள்.

विपञ्च्या गायन्ती विविधमपदानं पशुपतेः
त्वयारब्धे वक्तुं स्खलितवचसा साधुवचने ।
त्वदीयैर्माधुर्यैरपलपिततन्त्रीकलरवां
निजां वीणां वाणी निचुलयति चोलेन निभृतम् ॥

விபஞ்ச்யா காயந்தீ விவிதமபதாநம் பசுபதே:
த்வயாரப்தே வக்தும் ஸ்கலிதவசஸா ஸாதுவசநே ।
த்வதீயைர்மாதுர்யை ரபலபிததந்த்ரீகலரவாம்
நிஜாம் வீணாம் வாணீ நிசுலயதி சோலேந நிப்ருதம் ॥

*சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளிடம் இருதயம் உருகி, கருணை வெள்ளம் ஞானப்பாலாகப் பெருகியது.*

तव स्तन्यं मन्ये तुहिनगिरिकन्ये ॥
தவ ஸ்தந்யம் மந்யே துஹிநகிரிகந்யே ॥

*அநேக ப்ரஹ்மாண்டங்களை ஆக்கவும் அழிக்கவும் சக்தி வாய்ந்த தேகமுள்ளவள் தேவி. இம்மூன்றும் ஒன்று சேருவது மிக அரிது. அரிய காரியத்தைச் சுலபமாகச் செய்யும் திறமை வாய்ந்தவர்களுக்கு வாக்கில் மிருது ஸ்வபாவமும் மனத்தில் இரக்கமும் இருப்பது அரிது. மனத்தில் தயையும் வாக்கில் மார்த்தவமும் உள்ள சாந்த ஸ்வபாவமுள்ளவர்களுக்கு, சரீரத்தினால் ஒரு பெரிய காரியத்தைச் செய்ய முடியாது. அம்பாளிடம் இம்மூன்றும் ஒன்று சேர்ந்திருப்பது ஆச்சரியமானது. நினைத்த மாத்திரத்தில் பாவங்களைப் போக்குகிறவள்; வேதங்களின் ஸாரமான உபநிஷத்துக்களில் கொண்டாடத் தகுந்தவள்.*

"ऐदंपर्यं चकास्ति निगमानाम् । प्रभुसम्मितोक्तिगम्यम्" என்றெல்லாம் போற்றத் தகுந்தவள், பரமசிவனின் பேரன்புக்குப் பாத்திரமாகப் பாதி சரீரத்தில் விளங்குபவள். இவ்விதம் மகிமை வாய்ந்த பரதேவதையைப் பஜனம் செய்கிறேன்.

सुधासिन्धुसारे चिदानन्दनीरे समुत्फुल्लनीपे सुरत्नान्तरीपे ।
मणिव्यूहसाले स्थिते हैमशाले मनोजारिवामे निषण्णं मनो मे ॥ २५ ॥

ஸுதாஸிந்துஸாரே சிதாநந்தநீரே
ஸமுத்புல்லநீபே ஸுரத்நாந்தரீபே ।
மணிவ்யூஹஸாலே ஸ்திதே ஹைமசாலே
மநோஜாரிவாமே நிஷண்ணம் மநோ மே ॥

பதவுரை:—सुधासिन्धुसारे - அமுதக் கடலின் நடுவில், चिदानन्दनीरे - அறிவுமயமாயும் ஆனந்தமயமாயும் உள்ள ஜலம் நிறைந்ததும், समुत्फुल्लनीपे - நன்கு மலர்ந்த நீப (அடம்ப) மரங்களையுடையதும், मणिव्यूहसाले - நவரத்தினமயமான மண்டபங்களுடன் கூடியதும், सुरत्नान्तरीपे - மணிமயமான தீவில் உள்ளதும், हैमशाले - ஸுவர்ணமயமான மண்டபத்தில், स्थिते - இருக்கிறதுமான, मनोजारिवामे - பரமசிவனின் இடது பாகமாகிய அம்பாளிடத்தில், मे मनः - எனது மனம், निषण्णम् - பற்றுக் கொண்டது.

கருதது:—அம்பாளின் ஸ்வரூப குணங்களை விஸ்தாரமாக அநுஸந்தானம் செய்து, கடைசியில் ஆத்ம நிவேதனம் என்ற பக்தியின் முதிர்ந்த நிலையை அடைந்து மனத்தை அம்பாளிடம் அர்ப்பணம் செய்கிறார். அம்பாள் வசிக்கும் இடங்களைச் சொல்லும்பொழுது, மஹாமேரு பர்வதத்தின்

மேல் சிகரம் என்றும், அமுத ஸமுத்திரத்தின் நடு என்றும் சொல்லப்படுகிறது. இங்கு அமுத ஸமுத்திரத்தின் நடுவில் இருபத்துநான்கு ப்ரகார முள்ள மணித்வீபத்தின் மத்தியில் சிறந்த மணி மயமான ஆலயத்தில் சிம்மாசனத்தில் பரமசிவ னுடன் வீற்றிருக்கும் ஸ்ரீ ராஜராஜேச்வரியிடம் மனத்தை அர்ப்பணம் செய்கிருர். இந்த மணித்வீ பத்தைப் பற்றி, தேவீ பாகவதம் 12-ஆம் ஸ்கந்தம் முடியும்பொழுது,

"मणिद्वीपः पराम्बाया वासार्थं कल्पितस्तया।
ब्रह्मलोकाच्च वैकुण्ठात् कैलासाद्गोकुलादथ॥"

மணித்வீப: பராம்பாயா வாஸார்தம் கல்பிதஸ்தயா ।
ப்ரஹ்மலோகாச்ச வைகுண்டாத் கைலாஸாத் கோகுலாதத ॥

—தேவீ பாகவதம் 12 ஸ்கந்தம் முடிவில்.

என்று ஆரம்பித்து ஐந்து அத்தியாயங்களால் வர்ணிக்கப்படுகிறது.

सुधासिन्धोर्मध्ये सुरविटपिवाटीपरिवृते
मणिद्वीपे नीपोपवनवति चिन्तामणिगृहे।
शिवाकारे मञ्चे परमशिवपर्यङ्कनिलयां
भजन्ति त्वां धन्याः कतिचन चिदानन्दलहरीम्॥

ஸுதாஸிந்தோர்மத்யே ஸுரவிடபிவாடீபரிவ்ருதே
மணித்வீபே நீபோபவநவதி சிந்தாமணிக்ருஹே ।
ஶிவாகாரே மஞ்சே பரமஶிவபர்யங்கநிலயாம்
பஜந்தி த்வாம் தந்யா: கதிசந சிதாநந்தலஹரீம் ॥

என்று பகவத்பாதாசாரியர் ஸௌந்தர்யலஹரி யில் கூறியுள்ளார்.

दृगन्ते विलोला सुगन्धीषुमाला प्रपञ्चेन्द्रजाला विपत्सिन्धुकूला ।
मुनिस्वान्तशाला नमल्लोकपाला हृदि प्रेमलोलाऽमृतस्वादुलीला ॥ २६ ॥

த்ருகந்தே விலோலா ஸுகந்தீஷுமாலா
ப்ரபஞ்சேந்த்ரஜாலா விபத்ஸிந்துகூலா ।
முனிஸ்வாந்தசாலா நமல்லோகபாலா
ஹ்ருதி ப்ரேமலோலா அம்ருதஸ்வாதுலீலா ॥

**பதவுரை** :—दृगन्ते विलोला - சஞ்சலமான கடைக் கண்களையுடையவளும், सुगन्धीषुमाला - நறுமணம் பொருந்திய புஷ்பமயமான அம்புகளின் வரிசையை யுடையவளும், प्रपञ्चेन्द्रजाला - உலகத்தை இந்திர ஜாலம்போல் தோற்றவைப்பவளும், विपत्सिन्धुकूला - ஆபத்துக்களாகிய கடலுக்கு அப்பால் உள்ளவ ளும், मुनिस्वान्तशाला - முனிவர்களின் மனத்தை ஆலய மாகக் கொண்டவளும், नमल्लोकपाला - லோகபாலர் களாகிய இந்திராதி தேவர்களால் வணங்கப்பட்ட வளும், प्रेमलोला-அன்பு மிகுந்தவளும், अमृतस्वादुलीला - அமுதம்போல் இனிக்கும் லீலைகளையுடையவளு மான பராசக்தி, हृदि - மனத்தில் விளங்கட்டும்.

**கருத்து** :—முன்பு மனத்தை அம்பாளிடம் அர்ப்பணம் செய்தபடியால் மனத்தில் தோன்றும் அம்பாளின் ஸ்வரூபத்தை இந்த ச்லோகத்தில் வர்ணிக்கிறார்.

சஞ்சலமான கண்களையுடையவள். உத்தம ஸத்ரீகளுக்குக் கண்கள் சஞ்சலமாகவே இருக்கும். मृगाक्षी என்று சொல்வதுண்டு. புஷ்ப மயமான அம்புகளைத் தரிக்கிறபடியால் நறு மணம் வீசுகிறது. பிரபஞ்சத்தை இந்திரஜாலம்

போல் தோற்ற வைக்கிருள். இந்திரஜாலம் செய்பவன் சிரமமின்றித் தான் இருக்கும் இடத்திலிருந்தே, உபாதான பதார்த்தம் இல்லாமல், பல வஸ்துக்களைக் காண்பிக்கிருன். அதுபோல் எவ்வித முயற்சியுமின்றி விளையாட்டாகவே உலகத்தைத் தேவி தோற்ற வைக்கிருள். நினைத்த மாத்திரத்தில் ஆபத்துக்களைப் போக்குபவள். आर्तो जिज्ञासुः என்று கீதையில், ஆபத்தை அடைந்தவன் பகவானை ஸ்மரிக்கிருன்; ஆபத்து நீங்குகிறது என்கிருர். உபாஸகர்களான முனிவர்களின் மனத்தில் எப்பொழுதும் வசிப்பதால் ஆலயம்போல் விளங்குகிறது முனிவர்களின் மனம். இந்த்ராதிகளான திக்பாலர்கள் ஜகன்மாதாவான பராசக்தியை வணங்குகிருர்கள். அம்பாளின் சரித்திரங்களைக் கேட்டால் அமுதம்போல் இனிப்பாக இருக்கிறது. இவ்விதம் ஹ்ருதயத்தில் தோன்றுகிருள் என்று வர்ணிக்கிருர்.

जगज्जालमेतत् त्वयैवाम्ब सृष्टं त्वमेवाद्य यासीन्द्रियैरर्थजालम् ।
त्वमेकैव कर्त्री त्वमेकैव भोक्त्री न मे पुण्यपापे न मे बन्धमोक्षौ ॥२७॥

ஜகஜ்ஜாலமேதத் த்வயைவாம்ப ஸ்ருஷ்டம்
த்வமேவாத்ய யாஸீந்த்ரியைரர்த்தஜாலம் ।
த்வமேகைவ கர்த்ரீ த்வமேகைவ போக்த்ரீ
ந மே புண்யபாபே ந மே பந்தமோக்ஷௌ ॥

பதவுரை :—अम्ब - தாயே, त्वयैव - உன்னுலேயே, एतत् - இந்த, जगज्जालम् - இந்திரஜாலம் போன்ற உலகம், सृष्टम् - படைக்கப்பட்டது; अद्य - இப்பொழுதும், त्वमेव - நீயே, इन्द्रियैः - இந்திரியங்களால்,

**अर्थजालम्** - விஷயங்களில், **यासि** - செல்லுகிருய் (அநுபவிக்கிருய்); **त्वम्** - நீ, **एकैव** - ஒருத்தியே, **कर्त्री** - உலக வ்யவஹாரங்களை நடத்துபவள்; **त्वम्** - நீ, **एकैव** - ஒருத்தியே, **भोक्त्री** - விஷய போகங்களை அநுபவிப்பவள்; **मे** - எனக்கு, **पुण्यपापे** - புண்ணிய பாவங்கள், **न** - இல்லை, **मे** - எனக்கு, **बन्धमोक्षौ** - சம்சாரபந்தமும் சம்சாரத்தினின்று விடுதலையும், **न** - இல்லை.

கருத்துரை :—இதுவரையில் அம்பாளின் ஸ்வரூபத்தையும் மகிமையையும் வர்ணித்து, ஆத்மநிவேதனம் என்ற ஸாத்யபக்தியின் மூலம் தம்மை அம்பாளிடம் அர்ப்பணம் செய்து, உலக வ்யவஹாரங்களை மறந்து, இந்தக் கிரந்தத்தை ஆரம்பிக்கும்பொழுது அம்பாளை ஜகத்துக்குக் காரணமாக அநுஸந்தானம் செய்ததுபோல, முடிவிலும் அதே மாதிரியாக, 'இந்தப் பிரபஞ்சத்துக்குக் காரணம் நீதான். நீயே அத்வைதஸ்வரூபமானபரப்ரஹ்மம். உன்னிடத்திலேயே இந்த உலகம் இந்திரஜாலம் போல் தோன்றுகிறது. நீயே ஒவ்வொரு சரீரத்திலும் இருந்துகொண்டு உலக வ்யவஹாரங்களை நடத்துகிருய்; போகங்களை அநுபவிக்கிருய். நான் வேறு என்று தனியாக இல்லாததனுல் புண்ணியம் பாவம் என்பது கிடையாது; பந்தம் மோக்ஷம் ஸுகம் துக்கம் ஒன்றுமே எனக்குக் (ஜீவனுக்கு) கிடையாது' என்று சுத்தமான அம்பாளின் ஸ்வரூபத்தை அநுஸந்தானம் செய்து பூர்த்தி பண்ணுகிருர்கள்.

इति प्रेमभारेण किञ्चिन्मयोक्तं न बुद्ध्वैव तत्वं मदीयं त्वदीयम् ।
विनोदाय बालस्य मौर्ख्यं हि मातस्तदेतत्प्रलापस्तुतिं मे गृहाण ॥ २८ ॥

இதி ப்ரேமபாரேண கிஞ்சிந் மயோக்தம்
ந புத்வைவ தத்வம் மதீயம் த்வதீயம் ।
விநோதாய பாலஸ்ய மௌர்க்யம் ஹி மாத:
ததேதத் ப்ரலாபஸ்துதிம் மே க்ருஹாண ॥

பதவுரை :—**इति** - இவ்விதம், **प्रेमभारेण** - *அன்பின் மிகுதியால்,* **त्वदीयं तत्वं** - *உன்னுடைய உண்மையையோ,* **मदीयं तत्वं**-*என்னுடைய உண்மையையோ,* **न बुद्ध्वैव** – *அறியாமலேயே,* **किंचित्**-கொஞ்சம், **मया** - *என்னால்,* **उक्तम्** - சொல்லப்பெற்றது. **मातः** - *தாயே,* **बालस्य** - *குழந்தையான என்னுடைய,* **विनोदाय** - *விளையாட்டாகச் செய்யப்பெற்ற,* **मौर्ख्यं हि** - *அறியாமை அல்லவா?* **तदेतत्** - *அத்தகைய இந்த என்னுடைய,* **प्रलापस्तुतित्** - *புலம்புதலாகிய ஸ்தோத்திரத்தை,* **गृहाण** - *ஏற்றுக்கொள்வாயாக.*

கருத்து :—*கிரந்தத்தின் பூர்த்தியில் தமது விநயத்தை இந்த ச்லோகத்தில் ஆசார்யர் தெரிவிக்கிறார். அவதாரபூதர்களானாலும் மஹநீயர்களானாலும் உலக வ்யவஹாரத்தில் ஈடுபட்டுக் காரியங்களைச் செய்யும்பொழுது சாதாரண ஜனங்கள் போலவே தம்மையும் காண்பித்துக் கொள்வது பழக்கம். ஸ்ரீராமன் தண்டகாரண்யம் சென்றபொழுது அங்குள்ள மஹர்ஷிகளை நமஸ்காரம் செய்து அநுக்ரஹம் பெற்றார் என்று ஸ்ரீமத் ராமாயணத்தில் காண்கிறது.*

இந்தக் கிரந்தத்தில் வேதங்களிலும் புராணங்களிலும் குறித்துள்ள அரிய பல விஷயங்களை எளிதில் சாதாரண ஜனங்களுக்கும் நன்கு புரியும்படி கூறியருளி, கடைசியில் விநயத்தைப் பிரதர்சனம் செய்து, இந்த ஸ்தோத்திரத்தை ஆசாரியர் அம்பாளிடம் அர்ப்பணம் செய்கிறார்.

**ஸ்ரீ தேவீ புஜங்கம்**

**முற்றும்.**

ஸ்ரீ சந்த்ரமௌலீச்வராய நம:

# ஸ்ரீ காமகோடி கோசஸ்தானத்தின்

## சில முக்கிய வெளியீடுகள்

ஒவ்வொரு புத்தகமும் ஸ்ரீ ஆசார்யாளுடைய அநுக்ரஹ பூர்வகமான ஸ்ரீமுகத்துடனும் கூடியது.

1. ஸ்ரீ பஜகோவிந்தம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... ரு.பை. 0—80
2. ஸ்ரீ முகுந்தமாலா—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் உரையும் கூடியது .... .... .... 0—60
3. ஸ்ரீ ப்ரச்னோத்தர ரத்னமாலிகா—ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இயற்றியது (தமிழ் லிபியில்) .... .... .... 0—60
4. ஸ்ரீ மூகபஞ்சசதீ—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழுரையுடனும் .... .... .... 2—50
5. தேவீ ஸ்தோத்ர ரத்னாகரம்—12 தேவி ஸ்தோத்ரங்கள் அடங்கியது, ஸம்ஸ்க்ருதம் தமிழில் மூலமும், தமிழ் அர்த்தத்துடனும் (அச்சில்) .... .... ... 2—00
6. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்—தேவநாகரி, தமிழ் லிபிகளில் மூலமும், தமிழ் அனுவாதமும் ... 2—50
7. ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரமும், நாமாவளியும்—ஸம்ஸ்க்ருதத்தில் .... .... 0—60
8. —ஷை—தமிழில் ச்லோகமும், நாமாவளியும்.... .... 0—50
9. ஸ்ரீசிவபாதாதி கேசாந்த வர்ணநம் முதலிய ஐந்து சிவ ஸ்தோத்ரங்கள்—ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 1—75
10. விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்ரம்—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் ஆங்கில அனுவாதங்களும் .... 1—50
11. ஸ்தோத்ர பஞ்சகம் .... .... .... 0—70
12. மாத்ருகா புஷ்பமாலா ஸ்துதி—ஸம்ஸ்க்ருத மூலமும் தமிழ் அனுவாதமும் .... .... .... 0—62
13. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்—ஸ்ரீ ஸுரேச்வராசார்யாளின் மானஸோல்லாஸ வார்த்திகத்துடன் கூடியது 1—75
14. ருத்ரம் சமகம்—ஸம்ஸ்க்ருதத்தில் .... .... 1—00
15. ஆத்மார்ப்பண ஸ்துதி—ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் இயற்றியது ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும், தமிழில் மூலமும் அர்த்தத்துடன் .... .... .... 1—50
16. ஸ்ரீ பஜன ரத்னாகரம்—ஸம்ஸ்க்ருதம் தமிழிலும் கிட்டத்தட்ட 900 கீர்த்தனங்கள் கொண்டது. இது ஒரு பஜனைப் பொக்கிஷம் ... .... 12—00

ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
4, பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு, சென்னை-600001